

# வலை

குறுநாவல்



ஜான் பிரபு

# சொற்களாய் மட்டும் மரிப்பவர் அல்ல...

நெடும் கயிறு வலந்த குறும் கண் அம் வலைக்
கடல் பாடு அழிய இன மீன் முகந்து துணை புணர்
உவகையர் பரத மாக்கள்!
-புறம். 30

வாழ்வு ஒரு தத்தளிப்புக்குள் அடங்கிவிடுகிறது.
கண்ணீரும் கம்பலையுமானது மட்டும் தானா மீனவனின் வாழ்க்கை. நிலத்தின் நிரந்தரத் தன்மை கடலுக்குக் கிடையாது. இங்கே வயலுக்குள் நெல்போட்டு அறுவடை செய்கிறவனுக்கு தண்ணீர் பிரச்சனை. அங்கே தண்ணீருக்குள் வலைபோட்டு மீன் பிடிப்பவனுக்கு வரப்புகள் (எல்லை) பிரச்சனை.
காத்துக் கடலில் எவர் வந்து கோடு வரைந்துபோட்டது எங்கள் கடலுக்குள். ராமேஸ்வரத் தீவுகளில் அல்லலுற்று பாடு பார்க்கும் மீனவனை கட்சத்தீவின் பெயரைச் சொல்லியே இன்னும் எத்தனைக் காலத்துக்கு பலிகொடுக்கப் போகிறது இந்த அரசியல் கூப்பாடுகள். கட்சத்தீவில் சாம்பல் தான் மலிந்துகிடக்கிறது. கண்ணுக்குத் தெரியும் தீர்வு எங்கே இருக்கிறது என்று ஒரு மண்ணும் புரியாதவர்கள் அதிகாரபீடங்களை அலங்கரித்துக் கொண்டிருக்கிறார்கள்.
கரையிலிருப்பவர்களுக்கு இலங்கைக் கடற்படையால் மீனவன் பிடிபட்டாலும். சுடப்பட்டாலும் அது ஆறாம்பக்கச் செய்தி. இன்னும் போனால், இந்திய மீனவனா? தமிழக மீனவனா என்ற தாவைவைத் தீர்க்கவே அவர்களுக்கு நேரம் போதாது! கடலுக்குள் பிரச்சனை எல்லை தாண்டுவது தான் என்றால், எட்டாயிரம் கிலோமீட்டர் கடல் எல்லையைக் கொண்ட தேசத்தின் மீன்வளம் கொட்டிக்கிடக்கும் ‘வெட்ஜ் பாங்க்’ பகுதியில் சிங்கள மீனவர்களின் ஊடுருவல்களை நம் கடற்படை இதுவரை ஒரு அதட்டுக்கூட போடுவதில்லையே ஏன்?
தமிழக மீனவனை இந்திய தேசியத்தின் நீட்சியாக சிங்களம் பார்க்கிறது. அதன் கால் நகங்கள் எங்கே தன் கண்ணுக்குள் காயம் ஏற்படுத்திவிடுமோ என்ற அச்சத்தை தமிழக மீனவனை அடித்தும், விரட்டியும், சுட்டும் தீர்த்துக் கொள்கிறது. ஆனால், தமிழனை இந்திய தேசியம் எப்போதும் மாற்றாந்தாய் பிள்ளையாகவே நடத்தி வருகிறது.
நம் கடலோடிகளும், மாநில, மாவட்ட எல்லைத் துண்டங்களாயும், இனக்குழு பாகுபாடுகளாயும், மத வேறுபாடுகளாளும் பிரிந்து கிடக்கிறார்கள். அவர்களது குரல் வலுவாக ஒலித்த சட்டமன்றமோ நாடாளுமன்றமோ இதுவரை அமைந்ததில்லை. மீனவனை ஒருமுகப்

படுத்தும் அரசியல் தலைவர்கள் அவர்களிடையே எழுந்து வரவேண்டும். தங்கள் மீதான அடக்குமுறை அரசியலை, தேசிய மைய நீரோட்டத்திற்கு நேர்நின்று பேசவேண்டும்.
தங்கள் வாழ்வும், பண்பாடும், உயிரும் மலிவானதல்ல என்பதை சமவெளி மனிதர்களோடு கலந்துரையாட வேண்டும். ஊடலும், காதலும், சாவும், பிறவும் மட்டும் நாங்களில்லை. எங்களுக்கும் உங்களைப் போல் ஓர் வாழ்வு உள்ளது என்று எழுதவேண்டும். நிலத்தை கொண்டாட்ட வெளியாகவும், கடலைத் தொழில் வெளியாகவும் கொண்ட மீனவ மக்கள், இரண்டையும் தங்களுடைய அரசியல் வெளியாக மாற்றி எழுதவேண்டிய நூற்றாண்டு இது.
தனக்கும், தன் மக்களுக்கும் நிகழ்த்தப் படும் வன்முறைகளுக்கு எதிராக தனித்த குரலோடு பொங்கி நுரைப்பதொடல்லாமல், தன்னோடு இயந்து வாழும் பிற இனக்குழு மக்களோடு கலாச்சாரத் தொடர்புகளை மேம்படுத்தவும், பண்பாட்டின் வேர்களைக் கண்டெடுத்து பிணைக்கவும், அறிவுசார் பங்களிப்புகளில் தன்னை ஈடுபடுத்தவும் முனைகிறார்கள். அந்த முனைப்பை போற்றி வளர்ப்பது நெய்தல் வெளியின் முன்னோடிகளின் பெருங்கடமை.
ஜாண் பிரபு எழுதியிருக்கும் இக்குறுநாவல் பேசுகிற வாழ்வு, கடலோடியின் ஆற்றாமையில் எழுந்ததில்லை. தன் ஏக்கத்தைப் பகிர்ந்துகொள்ளும் கையறு மனநிலையிலும் உதித்ததில்லை. ரத்தமும் சதையுமாய் தங்களை வதைக்கும் சிங்களக் கடற்படையின் சித்ரவதைகளையும், சுக துக்கங்களையும் வெளிக்காட்டி இரக்கம் சம்பாதிப்பதுமில்லை. ‘எங்களுக்கும் ஒரு மென் வாழ்வு உண்டு. எங்கள் தாய், என் தகப்பன், எம் பிள்ளைகள் என்று தனித்த ஓர் வாழ்வு உங்களைப் போலவே எங்களுக்கும் உண்டு. எங்களைப் பற்றி நீங்கள் தெரிந்துகொண்ட செய்திச் சொற்களாய் மட்டும் மரிப்பவர் அல்ல நாங்கள்’ என்று கதையாடுகிறார்.
ஒரு கடலோடியின் மகனாக மட்டுமல்லாமல் வளமான கதைசொல்லியாகவும் மிளிர்கிறார். காற்றுக் கடலை அதன் போக்கில் எதிர்கொள்ளும் புதியவனின் மனநிலையோடு அவர் இலக்கியச் சூழலுக்குள் நுழைகிறார். நூலின் இரண்டாம் பதிப்பை, திருத்தங்களோடு வெளியிடுவதிலும், நெய்தல் வெளியின் இலக்கிய உருவாக்கத்தில் இந்த எளிய பங்களிப்பைச் செய்வதிலும் ‘ஜீவா படைப்பகம்’ உள்ளபடியே உவகை கொள்கிறது. அலையடியில் இருந்து ஜான் பிரபுக்கள் உதிக்கட்டும்.

-கார்த்திக் புகழேந்தி

# வெண்மணல் பரப்பிலிருந்து...

என் சமவெளி சகோதரர்களுக்கு வணக்கம்.

இந்தச் சமுதாயத்தில் எங்கோ ஓர் இடத்தில், யாரேனும் ஒருவரை இழிவுபடுத்தப் பயன்படும் வார்த்தைகளில் 'மீன்காரன் அல்லது மீன்காரி' என்ற வார்த்தைகளும் மிக முக்கியமான ஒன்று.

'இந்த எடம் எதுக்கு மீன் மார்க்கெட் மாதிரி இவ்வளோ சத்தமா இருக்கு?', 'மீனவன் செத்தால் நமக்கென்ன?' என்று கடந்துபோகிறவர்கள் எவரேனும், எங்களின் வாழ்க்கை முறை மற்றும் குணாதிசயங்களை அருகில் நின்று பார்த்திருக்கிறார்களா! தெரியவில்லை.

ஆரம்பத்தில் மீனவனைக் குறித்துச் சொல்லப்படும் தவறான அபிப்ராயங்களை, குற்றப்பார்வைகளை யாரொருவர் வாய் வார்த்தைகளாகக் கேட்கும் பொழுதெல்லாம் அவமானத்தில் கூனிக்குறுகிப் போயிருக்கிறேன். நாட்கள் செல்லச் செல்ல அந்த வார்த்தைகள் எனக்கு வலியைக் கொடுத்தது. எனக்குள்ளே கோபத்தை விதைத்தது. சில நேரங்களில் உள்ளுக்குள்ளே அழுதிருக்கிறேன். யாரோ இருவருக்கு நடுவே நடக்கும் உரையாடலில்கூட மீனவனின் வாழ்வு ஏன் இப்படி வெளிமனித மனப்பான்மையோடு சித்தரிக்கப்படுகிறது என்று சிந்திக்கும்போது சுடச்சுட அவர்களுடன் எதிர்வினையாற்ற வேண்டும் எனத் துடித்திருக்கிறேன்,

ஆனால், என்னுடைய கோபம் கொஞ்ச நாட்களில் பக்குவப்பட, அதே கோபத்தையும், அழுகையையும் வன்முறையில்லாமல். பக்குவமாக வெளிப்படுத்த நினைத்தபொழுது எழுத்து என் வழியைத் தீர்மானித்தது. இந்தியப் பிரதேசத்தில் தொடர்ந்து இடர்பாடுகளுக்கு உள்ளாகும் மீனவர் வாழ்வை உள்ளது உள்ளபடி சமவெளி மக்களுக்குத் தெரியப்படுத்த வேண்டும் என்று இந்தக் குறுநாவலை நான்கு ஆண்டுகளுக்கு முன்பு எழுதி முடித்தேன்.

எங்கள் மீனவ சமூக எழுத்தாளர் அண்ணன் ஜோ டி குரூஸ் அவர்கள் ஒரு நேர்காணலில் கூறுகிறார், ''கடற்கரை மக்களின் வலி, சமவெளி மக்களுக்குத் தெரிய வேண்டுமெனில், கடற்கரை மக்கள் சமவெளி மக்களுடன் உரையாட வேண்டும். அந்த உரையாடல் இலக்கியமாக வேண்டும். மீனவர்களுக்கு வலிக்கிறதாம்; என்று சொல்வதைவிட, கடற்கரைச் சமூகத்திலிருந்து வந்தவனே, எனக்கு வலிக்கிறது என்ற

குரலை சமவெளி மக்களிடம் ஒலிக்கவேண்டும். அந்த வார்த்தைதான் மீனவனது வலியை அவர்களிடையே கடத்தும்" என்றார்.

அண்ணனின் வார்த்தைகள் அப்படியே என் மனநிலை பிரதிபலிப்பதாக இருந்தது. சமவெளி மக்களைப் பொறுத்தவரை மீனவனின் வாழ்வு என் கச்சத்தீவு அருகில் சுடப்படும்பொழுது ஆரம்பித்து, அவன் சடலம் கரையில் கொண்டு வந்து கிடத்தப்பட்டு செய்தியில் வாசிப்பதோடு முடிகிறது. அதைத் தாண்டி மீனவர்களின் அன்றாட இயல்பு வாழ்வை வெளிப்படுத்த விரும்பினேன்.

கச்சத்தீவு அருகிலே சுடப்படும் மீனவனுக்கு, அவனுடைய வாழ்க்கை அங்கேயே தொடங்க அங்கேயே முடிவதில்லை. அவனுக்கும் சமவெளி மனிதர்களைப் போல அன்பு, கோபம், வருத்தம், கடன், காதல், குடும்பம், மனைவி பிள்ளைகள் எல்லாம் உண்டு.

தொலைநோக்கி வழியாக எங்களைப் பார்த்துக் கொண்டிருக்கும் ஒரு சமவெளி மனிதன் அருகில் சென்று அவன் தொலைநோக்கியைப் பிடுங்கி எறிந்து விட்டு என்னுடன் அழைத்து வர வேண்டும் என்பதே என் நோக்கமாக இருந்தது. எந்த மீனவன் கச்சத்தீவு அருகிலே மீன் பிடிப்பதை தொலைநோக்கி வழியே பார்த்துக் கொண்டிருந்தானோ, அந்த மீனவன் வீட்டிற்கு கூட்டிச்சென்று, அவன் குடும்பம், அவனுடைய தேவைகள், கலமரம் அறுத்து அலைபுகுபவனை, கடலுக்குள் தத்தளிக்கச் செய்த சூழ்நிலைகள் ஆகியவற்றைக் கண்முன்பாகக் காட்ட விரும்பினேன். அதையே இந்தப் புத்தகத்தில் செய்துள்ளேன்.

முதல் பதிப்பு வெளிவந்த குறைந்த நாட்களிலே இரண்டாம் பதிப்பினை வெளியிட, தோழர். கார்த்திக் புகழேந்தி அவர்களை அணுகியதும், உடனே தலையசைத்துப் பணிகளைக் கவனிக்க ஆரம்பித்து விட்டார். சக எழுத்தாளராகவும், பதிப்பாளராகவும், இந்தப் புத்தகத்தில் தன் பணிகளைச் செவ்வனே செய்துள்ளார். கதைப் போக்கை மாற்றாமல் வார்த்தைகளைச் சேர்த்தும் நீக்கியும் நூலை மெருகேற்ற உதவினார். அவருக்கும், புத்தகத்தை சிறப்பாக வடிவமைத்துத் தந்த தோழர் சிவகாசி சுரேஷுக்கும், ஜீவா படைப்பகத் தோழர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் சமவெளி உறவுகளே. இந்த மீன்காரன் கூறுகிறேன். எனக்கு வலிக்கிறது. வாருங்கள் என்னுடன் உரையாடுங்கள். உங்களின் உரையாடல் என் சமூக மக்களை மேல்நிலைக்கு கொண்டு வரும். நன்றி
.

சமர்ப்பணம்

தன்னுடைய குடும்பத்திற்காக உயிரை பணயம் வைத்து கடலுக்குச் சென்று வரும் என் மீனவ சொந்தங்கள் அனைவருக்கும் இந்த புத்தகத்தை காணிக்கையாக்குகிறேன்.

## -அத்தியாயம் : 1-

"போன தடவ புடிச்சுட்டு போயி வச்சி அடிச்சதே ஒவ்வொரு அமாவாசைக்கும் வலி உயிர் போகுது. அண்ணணையும் அப்புடிதான அடிப்பாய்ங்க. ஸ்லோன் நேவிகிட்ட அடி ஒத வாங்காம ஒருநாளும் கடலுக்குள்ள பொழப்ப பாக்க முடியல".

சூசை எப்பொழுதும் எந்திருக்கும் நேரத்தை விட சீக்கிரமாகவே எழுந்து விட்டான். வீட்டுக்கு வெளியில் நின்றபடி, டேவிட்டும் அவர் கூட்டாளிகளும் பேசிக் கொண்டிருக்கும் சத்தம் அவன் விடிகாலைத் தூக்கத்தைக் கலைத்துப் போட்டது. கண்களை கசக்கிக் கொண்டே வாசலுக்கு வந்தவன் திண்ணையில் உட்கார்து விசும்பிக் கொண்டிருந்த சூசையின் அம்மா ஜோதியையும், அவளைச் சுற்றி நின்றுகொண்டிருந்த பக்கத்து வீட்டுப் பெண்களையும் கவனித்தான்.

ஆளாளுக்கு ஜோதியைத் தேற்றிக் கொண்டிருந்தார்கள். தூங்கி எழுந்துவந்த மகனைப் பார்த்ததுமே ஜோதி அழுகையை மறித்து, சேலைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்து, மூக்குச் சிந்தினாள். சூசையின் சித்தப்பா டேவிட்டின் குரல் இப்போது கூட்டத்தைத் துளைத்துக் கொண்டு துல்லியமாக வெளிப்பட்டது.

“இப்புடிதான்யா போன வாரம் ரெண்டு லாஞ்சியவும் ஆளுகளையும் சேத்து புடிச்சுட்டு போனானுங்க. இப்ப எங்கண்ணனையும் சேர்த்து அஞ்சிபேரு. இப்புடியே அழிம்பு பண்ணிக்கிட்டு இருந்தா நம்மல்லாம் என்ன பொழப்புக்கு போறதா இல்லையானே தெரியலையே”

என்னம்மோ விவகாரம் நிகழ்ந்திருக்கிறது என்பதை சூசையால் புரிந்து கொள்ள முடிந்தது. அப்படியென்றால் தான் இன்றைக்கு பள்ளிக்கூடம் போகணுமா வேண்டாமா என்ற குழப்பத்திலேயே வாசலைப் பிடித்துக் கொண்டு சிறிதுநேரம் நின்றவன், கூடி நின்றவர்கள் ஒவ்வொருத்தரையும் கவனித்தான். அவர்கள் முகத்தில் சவக்களை பொங்கி வழிந்து கொண்டிருந்தது. தொழிலுக்குப் போய்விட்டு பாதி தொழிலில் தப்பித்தோம் பிழைத்தோம் என்று கரைவந்து சேர்ந்தவர்களைப் போல இருந்தார்கள்.

கூட்டத்தில் எங்கே தன் அப்பா அந்தோணியைக் காணும் என்று துலாவினான் சூசை. மறுகணமே வீட்டுத் திண்ணையில் அழுதபடி உட்கார்ந்திருக்கும் ஜோதியைப் பார்த்தான். தலையிலும் மார்பிலும் அடித்து, அழுது அழிபறியாகக் கிடந்த ஜோதியைக் கண்டதும் விசயம் லேசாகப் பிடிபட்டது சூசைக்கு.

வேர்க்கோட்டில் சொந்த லாஞ்சி வைத்து பாடு பார்க்கும் அந்தோணிக்கு

சூசை ஒரே பையன் பதினொன்றாவது. முடித்து இப்போதுதான் பனிரெண்டு போகிறான். ஜோதிக்கு சீமையிலில்லாத புத்திரன் பிறந்ததாக வைத்து மகனைத் தாங்கித் தாங்கி வளர்த்தாள். சூசையும் ஆள் பார்க்க நெடு நெடுவென்று வளர்ந்துவிட்டான் என்றாலும், பேட்டும், பந்துமாக கடற்கரை முழுக்க விளையாடித் திரிந்து, கடலுக்குப் போய்விட்டு வீடு திரும்பும் அப்பா அந்தோணியைக் கண்டதும் தாவி ஒட்டிக்கொள்ளும் சின்னப் பயலாகத்தான் இருந்தான்.

இப்போது அவன் அப்படிச் செய்வதில்லை. பனிரெண்டாவது முடிக்கும்போதே, தான் பெரியவனாக வளர்ந்துவிட்டதாக அவனுக்கு ஓர் எண்ணம். பள்ளிக்கூடத்தில் கூடப் படிக்கிற மலர்விழி மேலேகூட சின்னதாக ஒரு பரிவு உற்பத்தியாகியிருக்கிறது. அவளைக் கண்டாலே உள்ளுக்குள் என்னமோ சுரக்கிறது. அவள்கிட்டே பேசுவதற்காகவே வார்த்தைகளைத் தேடி அலைந்தான். அவளைப் பின்தொடர்ந்து செல்லும் சந்தர்ப்பங்களை உருவாக்கிக்கொண்டான். ஒவ்வொரு நாளும் பள்ளிக்கூடத்தில் மலர்விழியைச் சந்திப்பதற்காகவே தன் பொழுது விடிகிறதாகக் கருதிக் கொண்டான். ஆனால், இன்றைக்குப் பொழுது விடியும் போதே ரோதணையோடு விடிந்திருக்கிறது.

கூட்டத்தாருக்கு மத்தியில் நின்று கணேசன் அண்ணன் சத்தம்போட்டு பேச ஆரம்பித்தார்.

"சரி டேவிட்டு. இப்ப போயி கலக்டராபீஸ்ல மனுவ குடுத்துட்டு வருவோம். அப்புறம் மேக்கொண்டு என்ன பண்ணலாம்னு வந்து பாப்போம்"

"அத்தாச்சி, நீங்க ஒன்னுங்கவலப் பட வேணாம். அண்ணன தல மன்னாரு ஜெயில்லதான் வச்சிருப்பாய்ங்க. அங்க யாரையும் ரெம்ப நா கணக்குல வச்சுருக்க மாட்டாய்ங்க. சீக்கிரமா விட்ருவாய்ங்க. நாங்க போயி மனுவ குடுத்துட்டு வர்றோம். ஏ.. மேரி வீட்டப் பூட்டிட்டு இங்கன வந்து இரு, நாங்க போயிட்டு வந்துர்றோம்"

ஜோதியை சமாதானம் பண்ணிவிட்டு டேவிட்டும் கணேசனும் இன்னும் சிலபேருமாக இராமநாதபுரத்துக்குக் கிளம்பிப் போனார்கள். சூசை அவர்கள் புறப்பட்டுப் போவதையே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

இது ஒன்றும் எப்போதாவது நடக்கும் சம்பவம் இல்லை. சிலோன் நேவிக்காரர்கள் கடலுக்கு வெலங்கே பண்ணுகிற அட்டூழியங்கள் அளவில்லாதது. அதுபற்றி ஜனங்கள் அவ்வப்போது கூடிநின்று கொந்தளிப்பதும், சிறை பிடிக்கப் பட்டவர்களை மீட்க, கலெக்டர் அலுவலகத்தில் மனுகொடுப்பதும், அது ஒன்றுக்கும் உதவாத காரியமாக

கிடப்பில் போடப்படுவதும், தொண்டை தண்ணீர் வற்ற கத்திப் பார்த்துவிட்டு, மறுவாரம் லாஞ்சியை எடுத்துக்கொண்டு, மீண்டும் உயிரைப் பணயம் வைத்து தொழிலுக்குப் புறப்படுவதும் இப்போதெல்லாம் சர்வசாதாரணமாகி விட்டது.

நடுக்கடலில் சிலோன் நேவி யார்யாரைப் பிடித்துக்கொண்டு போனார்கள், எந்தெந்த படகை தாழ்த்திவிட்டார்கள், எவரெவர் வலைகள் அறுக்கப்பட்டன, எத்தனைப்பேரைச் சுட்டுக் கொன்றார்கள் இதுவரையிலும் சூசைக்கு வெறும் செய்திகள் தான். ஆனால், இன்றைக்கு சிலோன் நேவியிடம் பிடிபட்டிருப்பது அவன் அப்பா அந்தோணி என்கவும் துக்கம் நெஞ்சுக்குழிக்குள் காற்றை நிரப்பவிடாமல் தடுத்தது.

## -அத்தியாயம் : 2-

காலங்காலமாக அலையடியில் உருண்டும் பிரண்டும் நொய்ந்து பூவெள்ளையாக மாறிக் கிடக்கும் கடல்மணல் திட்டு பாம்பன் தீவு. அதிகப்படியான மக்களின் தொழில் மீன்பிடிதான். பாக் நீரிணையில் தொழிலுக்குப் போகும் விசைப்படகுகளில் வேர்க்கோட்டு அந்தோணியின் விசைப்படகும் ஒன்று.. அன்றைக்குத் தேதியில் அவரும், அவருடன் கூட தொழிலுக்குச் சென்றவர்களும் கச்சத்தீவுக்குக் கிழக்கே இலங்கை கடற்படையினரால் சிறைப் பிடிக்கப்பட்டுவிட்டார்கள்.

“அக்கா, இந்த காப்பிய குடிங்க. மச்சான் சீக்கிரம் வந்துருவாங்க. ஒங்க கொழுந்தந்தான் மனு குடுக்க போயிருக்காருல, மனுவ குடுத்துட்டு அடுத்து என்ன பண்ணனும்னு அவரு பாத்துப்பாரு. ஏ.. சூச, வாடா வந்து நீயும் காப்பிய குடி” சித்தி மேரி காப்பியை நீட்டி சூசையை நனவுலகுக்குக் கொண்டுவந்தாள். காப்பியைக் கையில் எடுத்துக் கொண்டவன், "சித்தி, அப்பாவ புடிச்சா ரெம்ப அடிப்பாய்ங்களா?” என்றான்.

“அதுலாம் இருக்காதுடா. சீக்கிரம் ஓன் அப்பா வந்துருவாரு. கவலப் படாம காப்பிய குடி”

காலமும் நேரமும் நிற்காமல் சென்றதில் ஒரு வாரம் கடந்திருந்தது. இருப்பினும் அந்தோணி இந்தியா திரும்பி வருவதில் எந்தவொரு முன்னேற்றமும் ஏற்பட்டதாக தெரியவில்லை. அந்தோணியை இன்னும் தலைமன்னார் சிறையில் வைத்திருப்பது மட்டுமே அவர்களுக்குக் கிடைத்த உறுதியான தகவல். அந்தோணி சிறைபிடிக்கப்பட்ட முதல் சூசை பள்ளிக்கூடத்துக்கே செல்லவில்லை. பிறகு, ஜோதிதான் அவனைப் வீட்டிலே அடைபட்டுக் கிடக்கிறானென்று பள்ளிக்கூடத்துக்குப் அனுப்பிவைத்தாள்.

அன்றைய தினம் இரண்டு வகுப்புகள் மட்டுமே நடந்தன. மற்ற நேரங்களில் எல்லாம் கடற்கரையில் நடந்த சம்பவங்களையே மாறி மாறிப் பேசிக்கொண்டார்கள். நண்பர்களும் ஆசிரியர்களும் சூசையின் அப்பாவைப் பற்றி விசாரித்தனர். சூசை மலர்விழியைத் தேடினால் அவள் அன்று பள்ளிக்கூடத்திற்கு வராதது அவனுக்கு இன்னும் வருத்தமாக இருந்தது.

மாலையில் பள்ளியிலிருந்து வீட்டுக்கு வரும்பொழுது சூசையின் சித்தப்பா வீட்டில் அமர்ந்திருந்தார். ஜோதியிடம் பேசிக்

கொண்டிருந்தவர் சூசையைப் பார்த்து, "டே சூச, ஒன் அப்பா இன்னும் ஒரு வாரத்துல வந்துடுவாப்ல. சரியா?" என்றார். அந்தோணி திரும்பவரும் செய்தி சூசைக்கு மகிழ்ச்சியைக் கொடுத்திருந்தது. ஜோதி உடனே முனியய்யா கோவிலுக்கு சாமி கும்பிடப் புறப்பட்டாள்.

அந்தோணிக்கும் ஜோதிக்கும் கல்யாணம் முடிந்து இன்றுவரை அவர்களுக்கு மதம் ஒரு இடைவெளியாக இருந்ததில்லை. அதை ஜோதியே பெருமையாகச் சொல்லுவாள். இரண்டு பேருக்கும் திருமணம் முடிந்து சூசை பிறக்கும் வரை இரு வீட்டுப் பெரியவர்களும் அவர்களுடன் பேசவில்லையென்றும், சூசை பிறந்ததும்தான் சொந்த பந்தங்கள் திரும்ப வந்தார்களென்றும் சூசையிடம் பலதடவை ஜோதி சொல்லியிருக்கிறாள்.

அன்றைக்குத்தான் ஜோதியின் முகத்தில் சிறிது நிம்மதியைக் காண முடிந்தது. வெறுந்தரையில் பாய் விரிக்காமலேயே உறங்கி விட்டிருந்தாள். டீவி பார்த்துக் கொண்டிருந்த சூசை, சிறிதுநேரம் கழித்து சாப்பிட எழுப்பினான். சாப்பிட்டு முடித்துவிட்டு தூங்க போகும்பொழுது ஜோதி அவன் கையைச் சேர்த்து பிடித்துக்கொண்டு தூங்கியது இவனுக்கு ஒரு மாதிரி பரிதவிப்பாய் இருந்தது. கொஞ்ச நேரம் கழித்து கையை விடுவித்துக்கொண்டு உருண்டு படுத்தான். அவன் அப்பாவின் நினைப்பின் கண்கள் பூத்து தலையணை நனைந்தது.

## -அத்தியாயம் : 3-

அந்தோணி கொஞ்சம் இளைத்திருந்தார். தாடி கொஞ்சம் வளர்ந்திருந்தது. தலைமன்னார் சிறையிலிருந்து அந்தோணியும் அவர் கூட்டாளிகள் நால்வரும் விடுதலையாகி வந்த செய்தி அறிந்ததும், சொந்தக்காரர்களும், அந்தோணிக்கு வேண்டப்பட்டவர்களும் அவரைப் பார்க்க குவிந்துவிட்டார்கள். ஜோதி எல்லாருக்குமாக அடுப்படியில் காப்பி போட்டுக் கொண்டிருந்தாள். வந்தவர்களுக்கெல்லாம் காப்பியைக் கொடுத்துவிட்டு, எல்லோருமாக உட்கார்ந்திருந்த மணலில் தானும் போய் அமைதியாக உட்கார்ந்துக் கொண்டாள். கைதுசெய்யப்பட்ட அன்றைக்கு கடலுக்குள் நடந்த சம்பவத்தைப் பற்றி அந்தோணி விவரித்துக் கொண்டிருந்தார்.

"லாஞ்சிக்கு பக்கத்துல வந்தோடன பயந்து போயி நின்னுட்டோம். அவனுக ரோந்து போட்ட எங்க லாஞ்சில அணச்சு நின்னாய்ங்க. அவனுக ரோந்து போட்டுல நம்ம லாஞ்சிய கட்டி இழுத்துட்டு போய்ட்டானுக. அப்பறமா முட்டி போடச் சொல்லி கழுத்துல இருந்து இருப்பெடம் வர அடி பின்னிட்டாய்ங்க. அதுல ஒரு அடி பொறமண்டைல விழுந்து கொஞ்ச நேரம் பொறி கலங்கிருச்சு."

அந்தோணியுடன் இலங்கைப் படையினரால் பிடிக்கப்பட்ட நால்வரும் கூட அங்கேதான் இருந்தனர். அவர்களும் கூட மிக மோசமான நிலையில் இருப்பது போல தோன்றியது. சிறிது நேரத்தில் ஆட்டோ வந்ததும், அந்த நால்வரும் ஆட்டோவில் ஏறிச்சென்றனர். அவர்கள் சென்றபின் ஒவ்வொருவராக எழுந்து சென்றனர். அந்தோணி மெதுவாக மணலில் கண்மூடி படுத்திருந்தார். படுத்த சிறிது நேரத்திலே சாப்பிடாமல் தூங்கவும் தொடங்கிவிட்டார். நிம்மதியான தூக்கம். ஜோதி அதைக் கலைக்க விரும்பாமல் சமைக்கிற வேலையைக் கவனிக்க ஆரம்பித்திருந்தாள். சூசை டீவியைப்போட்டு பாட்டுக் கேட்டுக் கொண்டிருந்தான். பொழுது சொல்லமுடியாத கனமான அமைதியோடு இருண்டு விடிந்தது.

காலையில் கண்விழித்து எழுந்தபிறகுதான் சகஜமான நிலைக்குத் திரும்பியிருந்தார் அந்தோணி. ஆவியெழுந்துகொண்டிருந்த மிதமான வென்னீரில் குளித்து வீட்டுக்குள் நுழைந்தவர் முதல் குரலாக பேசவும் தொடங்கினார்.

"அன்னைக்கு கடலுக்கு கௌம்பும்போதே ராசா வட்டிக் காச கேட்டான். வந்து தர்றேன்னு சொல்லிட்டு போனேன். அதுக்குள்ள இப்டி ஆயிடுச்சு."

"சரி விடுங்க. நேரஞ்சரியில்ல. கொஞ்சங்கொஞ்சமா குடுத்துருவோம்."

"என்னத்த குடுக்குறது? லாஞ்சிக்கு இருக்குற வேலயப் பாக்கவே பதினஞ்சாயிரத்துக்கு மேல ஆயிரும்போல. யாருட்ட கேக்குறதுன்னே தெரியல"

"போன தடவதான தாலிச் செயின அடகு வச்சோம். இந்த மொற என்ன பன்றதுனு தெரியல".

"யாருகிட்டயாச்சும் கெடக்குமானு பாப்போம். சூச வேற பரிச்ச பீசுக்கு ரூவா கேட்டான்."

இது அனைத்தையும் கேட்டுக்கொண்டிருந்த சூசைக்கு பள்ளிக்கூடத்திற்கு கொடுக்க வேண்டிய பணம் இவர்கள் நினைவில் இருப்பதால் சீக்கிரம் பணத்தைக் கட்டிவிட்டு வகுப்பறைக்கு வெளியே நிற்கும் அவமானத்தில் இருந்து தப்பித்துக் கொள்ளவேண்டும் முதலில் என்று நினைத்துக் கொண்டிருந்தான்.

அந்தோணி இரண்டு நாட்களில் வட்டிக்கு பதினைந்தாயிரம் வாங்கி வந்தார். ஜோதி தனது தந்தையிடம் ஒரு மோதிரத்தை வாங்கி வந்து ஏழாயிரம் ரூபாய்க்கு அடகு வைத்து பணம் எடுத்து வந்தாள். ஆயிரம் ரூபாயை சூசைக்கு கட்டி விட்டு மீதம் இருந்த பணத்தை வைத்து விசைப்படகை வேலை செய்தார் அந்தோணி. படகு வேலை செய்யப்பட்டு ஐந்து நாட்களில் கடலுக்குச் செல்ல தயாரானது. வேலை முடிந்து தயார் நிலையில் இருக்கும் படகைப் பார்த்து, பெருமூச்சொன்றை உதிர்த்துவிட்டு வீட்டை நோக்கி நடந்தார் அந்தோணி.

அடுத்தநாள் காலை எப்பொழுதும் வேலைக்கு வரும் நான்குபேரில் ஒருவர் குறைய, அந்தோணியுடன் மீதிபேரோடு கடலுக்குச் சென்றனர். எப்பொழுதும் தயாராக இருக்கும் இலங்கை கடற்படை அந்தோணியின் மனத்தில் எப்பொழுதும் இல்லாத அச்சத்தை உண்டாக்கியது. அவர்களை கடலுக்கு அனுப்பிவைத்த பிறகு, ஜோதியை கவலை வந்து ஒட்டிக்கொண்டது. அடிக்கடி சாமி படத்திற்கு முன் நின்றபடியே இருந்தாள்.

"அம்மா, ஒன்னு ஆகாதுமா. நீ சாமி கும்புட்டா ஸ்லோன்காரன் தூங்கிருவானா? சும்மா டிவியை மறச்சுகிட்டு நடக்காத"

"அட நீ வேற. கடலுக்குப் போனா அவய்ங்க புடிக்குராய்ங்க. போகலைனா குடும்பத்த பாக்க முடியல. ஒண்ண படிக்கவச்சு எங்கிட்டாவது அனுப்புச்சர்லாம்னுதான் அவரும் பெரும்பாடு பட்றாரு"

சூசைக்கு என்ன சொல்வதென்றெல்லாம் தெரியவில்லை.

இப்போதைக்கு அவள் டீவியை மறைக்காமல் இருப்பதே போதுமென்றிருந்தது. இரவு சாப்பாட்டை முடித்துக்கொண்டு இருவரும் தூங்க ஆரம்பித்தனர். காலையில் அந்தோணி வீட்டுக்கு வந்ததும் டீ குடித்துக் கொண்டே வீட்டிற்கு வெளியே மணலில் அமர்ந்திருந்தார். சூசை எழுந்து குளித்து விட்டு பள்ளிக்கூடத்திற்குப் புறப்பட்டான். அந்தோணி வீட்டிற்குள் வந்து படுத்தார்.

நேற்றைய இரவிலிருந்து ஜோதியின் முகத்தில் காணாமல் போயிருந்த நிம்மதி இப்பொழுது திரும்பியிருந்தது. இவ்வளவு நிம்மதி இல்லாத வாழ்வில் உழன்று கொண்டிருப்பதை நினைத்து முதன்முதலாக தன்னைத் தானே நொந்து கொண்டார் அந்தோணி. இந்த வேதனை அங்கே வாழும் அனைவருக்கும் பொதுவானதுதான். காலம் இப்படியோர் நினைப்பை மீனவனின் நெஞ்சத்தில் விதைக்கும் என்று யார்தான் அறிந்தார்கள். அன்றைய இரவும் மந்தமாகவே கடந்தது. நிம்மதியான உறக்கம் கூட அவர்களுக்கு வாய்க்கவில்லை.

அடுத்த இரண்டு மாதங்களில் ராமேஸ்வரத்தைச் சேர்ந்த இரண்டு படகுகள் இலங்கை கடற்படையினரால் சிறை பிடிக்கப்பட்டிருந்தது. அந்தோணியின் விசைப்படகு பிரச்சனையும் இல்லாமல் தொழிலுக்குச் சென்றுவந்தாலும் கூட, கடனைத் திருப்பி செலுத்தும் அளவுக்கு பாடு இல்லை. கூலிக்கு வருபவர்களுக்கு சம்பளம் கொடுத்து, கடன் கொடுத்து, மூலதனம் போட்டு கடைசியில் மிஞ்சுவது மிக சொற்பமானதாகவே இருந்தது. ஆனாலும், கடலம்மா தன்னையும் தன் குடும்பத்தையும் கைவிட்டுவிடமாட்டாள் என்கிற நம்பிக்கை மட்டும் அவரை உயிர்மூச்சாக இயங்க வைத்துக் கொண்டிருந்தது.

சூசையும் வழக்கம்போல பள்ளிக்கூடத்திற்கு சென்றுவந்து கொண்டிருந்தான். மீசை அரும்பும் வயதில் பள்ளியில் இருக்கும் பெண்களை பார்க்கும்பொழுது இனம் புரியாத உணர்ச்சிகளை புதிதாக அனுபவித்தாலும் இவனாக வலியச் சென்று பேசிய ஒரே பெண் மலர்விழி மட்டும் தான். அவளும் அவனுக்கு மட்டுமே பதில் கொடுத்து முகங்காட்டுகிறவளாக இருந்தாள்.

நிஜம் கற்பனையை விட வலி மிக்கதாகவும், கற்பனை நிஜத்தை விட அதிகதிகம் இனிமையானதாகவும் இருந்தது. சூசையின் வயது அவனை நிஜத்தை விட இனிமையான கற்பனைகளை உற்பத்தி செய்யத் தூண்டியது. கடற்குளத்தில் மிதந்து வரும் தக்கையைப் போல இனிய கனவுகளோடு மிதந்தலைந்து கொண்டிருந்தான் சூசை, அன்றைய இரவு உறக்கத்தின் போது, அவன் வீட்டுக் கதவு வேகவேகமாக தட்டப்படும் ஓசை அவன் செவிகளுக்கு எட்டப்படும் வரைக்கும்.

## -அத்தியாயம் : 4-

"அக்கா, அண்ணனுக்கு என்ன ஆச்சுன்னு தெரில. திடீர்னு மயக்கமாயிட்டாரு. அதான் என்ன பண்றதுனு தெரியாம லாஞ்சிய கரைக்கு திருப்பிட்டோம். பெரிய ஆஸ்பத்திரில அண்ணன சேத்துருக்கோம் ஒடனே வாங்க"

"என்னப்பா சொல்ற? பொறப்பட்டு போறப்பகூட நல்லாத்தான இருந்தாரு" சொல்லி முடிக்குமுன் ஜோதியின் குரல் உடைந்து நனைந்துவிட்டது. மேரியிடம் விசயத்தைச் சொல்லிவிட்டு சூசையும் ஜோதியும் வேகவேகமாக ராமேஸ்வரம் மருத்துவமனையை நோக்கி ஓடினார்கள்.

அந்தோணி இலங்கை கடற்படையினரால் பிடிக்கப்பட்டபோது இருந்த பயத்தை விட, சூசைக்கு இப்போது பீதி அதிகமாகியிருந்தது. அந்தோணி படுக்கையிலிருந்து திரும்பி அவர்களை பார்த்தார். கண்களில் மறைக்க முடியாத வலி ஒன்று எட்டிப்பார்த்தது. அதை தாயும் மகனும் கவனித்து வாய்பொற்றி அழுதார்கள். அவர்களைத் தேற்ற வழியற்று அந்தோணி வேதனையோடு முனங்கினார். அந்த வேதனை தன்னுடைய நிலையை நினைத்தா அல்லது பெற்ற பிள்ளையையும் மனைவியையும் நினைத்தா என்பதை பிரித்தறிய முடியவில்லை.

மருத்துவர் சொன்னபோதுதான் அந்தோணியின் உடல்நிலையின் தீவிரம் பற்றி ஜோதி அறிந்துக் கொண்டாள். தலைமன்னார் சிறையில் வைத்திருந்த நாட்களில் அந்தோணியின் பின்னந்தலையிலும், முதுகிலுமாக சிலோன் நேவிக்காரர்கள் தாக்கியதன் பாதிப்பு தாமதமாக வேலையைக் காட்டுகிறது. சிறையிலிருந்து வெளியில் எடுத்த மறுநாளே கடனை அடைக்கவேண்டிய நிர்பந்தங்களை நினைத்து வலியை மறைத்துக் கொண்டு கடலுக்குப் போக ஆரம்பித்துவிட்டார் அந்தோணி. பிள்ளைக்கும் பெஞ்சாதிக்கும் தெரிந்தால் வருத்தப்படுவார்கள் என்று தன்வலி பொறுத்து, மறைத்தே வைத்திருக்கிறார்.

அந்தோணி இனிமேல் கடினமான வேலைகள் எதுவும் பார்க்கக் கூடாது என்றும், அவரின் முதுகுத்தண்டு பாதிக்கப்பட்டிருக்கிறது என்றும் மருத்துவமனையில் தெரிவித்தார்கள். இரண்டு நாட்கள் படுக்கையில் வைத்து கவனித்தபிறகே வீட்டுக்கு வந்தார் அந்தோணி. சூசை தன் தந்தைக்கு கண்முன்னால் நடந்து கொண்டிருக்கும் நிஜத்தின் கூர்மையை உணர்ந்துக் கொண்டிருந்தான். தான் நினைத்துக் கூடப் பார்த்திராத வகையில் மிகக் கொடூரமான வதையை வாழ்க்கை தனக்குக்

கற்றுத் தரப் போகிறது என்கிற உண்மை அவனை மெதுவாகச் சுட்டது.

அந்தோணிக்கு முன்புபோல பேச்சு வேகமாக இல்லை. உடல் தன்வயமாக இயங்க மறுத்தது. எதைச் சொல்ல வந்தாலும் கொஞ்சம் நேரம் எடுத்துத்தான் பேசினார். அவரது உடல்நலப் பாதிப்பு ஜோதியின் மனதளவிலும் பெரும் பாதிப்பை உண்டு பண்ணியது. அந்தோணியின் இடத்தில் வேறு ஆள் இல்லாததால் தொழிலும் சீராக நடைபெற முடியாமல் தடுமாறியது. அன்று வீட்டிற்கு வந்திருந்த அந்தோணியின் தம்பி டேவிட் தொழிலுக்கு வேறு ஆளை ஏற்பாடு பண்ணுவது பற்றிய பேச்சைத் தொடங்கினார்.

"இன்னொரு ஆள புடிச்சிட்டா போதும். நாலு பேரு சேர்ந்து லாஞ்சிய ஓட்டிக்கிருவாய்ங்க. எப்புடியும் லாஞ்சிய தொழிலுக்கு அனுப்பிர்லாம்"

அந்தோணியும் டேவிட் சொன்னதை ஒத்துக் கொள்வதுபோல அமைதியாக இருந்தார். இப்போதைக்கு இந்த யோசனையை விட்டால் வேறு வழியும் இல்லை. வருமானம் இல்லாமல் கடனையும் வீட்டையும் சமாளிக்க முடியாது என்ற யதார்த்தத்தை வேறு யாரும் வந்து அந்தோணிக்குப் புரிய வைக்க வேண்டியதில்லை.

## -அத்தியாயம் : 5-

வழக்கமாகச் செல்லும் பாதையில் பள்ளிக்கூடத்துக்கு நடந்துசென்று கொண்டிருந்தான் சூசை பள்ளிக்கூடம் முடிந்து வரும்போது. வீட்டுக்கு வேண்டிய கறிச் சாமான்கள் சிலவற்றை வாங்கிவரச் சொல்லி சீட்டு தந்து அனுப்பியிருந்தாள் ஜோதி. அவன் மனத்தில் ஏதோவொரு இறுக்கம் கவ்விப் பிடித்துக் கொண்டிருந்தது. ‘முன்பெல்லாம் தன் வீடு எவ்வளவு சந்தோசமான வெளியாக இருந்தது. அப்பாவும் அம்மாவும் தானும் ஒன்றாகச் சேர்ந்து வாழ்ந்த நிம்மதியான வாழ்க்கையை சிலோன் நேவிக்காரன் வந்து சிதைத்துவிடுவான் என்று கனவிலும் நினைத்ததில்லையே. மடி இழுத்து, லாஞ்சியில் கம்பீரமாகத் தொழில் ஓட்டிக் கொண்டிருந்த அப்பாவை படுக்கையில் வீழ்த்திவிட்டார்களே! அவர்களை எதுவும் செய்யமுடியாத பாவத்தோடு புலம்பிக் கொண்டிருக்கிறோமே’ தன்னைத்தானே நொந்து கொண்டான் சூசை.

நீண்ட நாட்களுக்குப் பிறகு பள்ளிக்கூடப் பாதையில் மலர்விழி எதேச்சையாக எதிர்ப்பட்டாள். அவளைக் கண்டுகொண்ட கணத்திலே சூசையின் மனம் கூதலடிக்கிற பால்நிலா ராத்திரி போல் வெளுத்தது.

"என்ன சூச, ஸ்கூலுக்கா"

"ஆமா, என்ன உன்ன ஆளே காணும்?”

“வரணும். எங்க வீட்டுல வேலையாவே இருக்கு. அதான் பாதிநாள் வரமுடியாம போயிடுது”

“இதெல்லாம் ஒரு சாக்கா!”

“அப்படியில்ல. நீ முன்னால போ நான் இன்னைக்கு வரேன்”

தலையாட்டிக் கொண்டே நடக்க ஆரம்பித்தான் சூசை. மலர்விழி இவனைப் பார்க்காமல் திரும்பி நடந்து கொண்டிருந்தாள். தெரு முனையைத் தாண்டுகிற நேரத்தில் அவன் இன்னும் நிற்கிறானா என்று ஒரு கள்ளப்பார்வை பார்த்துவிட்டுத் தன் வீடு நோக்கி நடக்கத் தொடங்கினாள்.

மலர்விழி சென்ற வருடம் வரை வேறு பள்ளியில் படித்து விட்டு இந்த வருடம் தான் இந்த பள்ளியில் சேர்ந்திருந்தாள். படிப்பில் கொஞ்சம் மந்தமாக இருப்பதாக கூறி பனிரெண்டாம் வகுப்பில் தோல்வி அடைந்தால் பள்ளியின் பெயர் போய்விடும் எனக் கூறி அவளை அந்தப் பள்ளியிலிருந்து நீக்கிவிட்டதாக சூசையின் சித்தப்பா ஒருமுறை கூறிக்கொண்டிருந்தார்.

சூசையின் வீட்டிலிருந்து இருபது வீடுகள் தள்ளியிருந்தது மலர்விழியின் வீடு. மலர்விழியின் தந்தை நாராயணன், படகில் கூலி வேலைக்குச்

செல்பவர். கூலிக்குச் செல்பவர்களுக்கு தொடர்ந்து வேலை இருந்தாலும் வரும் வருமானம் என்னவோ கொஞ்சம் தான். அந்த வருமானத்தில் பெரும்பாதி டாஸ்மாக் கடைக்குச் செலவளித்தே கரைந்து போனது. அதனாலே வீட்டில் வறுமை தாண்டவமாடியது. அவளுடைய அம்மாவுக்கும் அப்பாவுக்கும் நடக்கும் பெரும்பாலான சண்டைகள் அரிசியில்லாத வெறும் பாத்திரத்தில் ஆரம்பித்து, மது பாட்டில்களை உடைத்துப் போடுவதிலே முடிந்தன.

நாராயணன் கிட்டே வாங்கிக்கட்டின அடியில் நைந்து நொம்பலமாகிக் கிடக்கும் தன் அம்மாவை ஆஸ்பத்திரிக்குக் கூட்டிப் போய் மருந்து போட்டு, வீட்டுக்கு வந்து மற்ற சுத்து வேலைகள் எல்லாம் செய்துமுடித்து ஓய்ந்து களைக்கும் மலர்விழி பள்ளிக்கூடப் பாடம் எதையும் படிக்க நேரங்காலம் கிடைத்ததில்லை. பாடங்கள் படிக்காமல் படிப்பும் மந்தமானது. அதனாலே பெருவாதியான நாட்கள் பள்ளிக்கூடத்திற்கு அவள் வராதது சாதாரண விஷயமாகிவிட்டது.

வகுப்புகள் ஆரம்பித்து சிலமணி நேரங்கழித்துதான் மலர்விழி பள்ளிக்கூடத்திற்கே வந்தாள். ஆசிரியரின் முகச்சுழிப்பு அவளைத் தொந்தரவு செய்ததுதான். ஆனாலும் சூசையிடம் இன்றைக்கு பள்ளிக்கூடம் வருவதாகச் சொன்ன வார்த்தைக்காக அவர் திட்டினாலும் தாங்கிக் கொள்ளும் மனநிலையில் வந்திருந்தாள். தாமதமாக வந்ததால் அவள் எப்பொழுதும் அமர்ந்திருக்கும் இடத்தில் வேறொருத்தி அமர்ந்திருந்தாள். கடைசி வரிசையில் காலியாக இருந்த இடத்தில் போய் உட்கார்ந்துக் கொண்டாள். அங்கிருந்து சூசை உட்கார்ந்திருந்த இடத்தை மலர்விழியால் எளிதாகப் பார்க்க முடிந்தது.

அவளுக்கு அவனிடம் பேசுவதும், அவனைப் பற்றிய எண்ணங்கள் மேலெழுவதும் ஒரு ரகசிய குறுகுறுப்பைத் தந்தன. அப்போதைய அவளுடைய மனநிலை, தன் முழுக் கவனத்தையும் சூசையின் மீது திரும்புகிற நேரத்தில் மட்டும் தான் மகிழ்ச்சியோடு இருப்பதாக நினைத்துக் கொண்டாள். அவன் திரும்பி அவளை ஒரு பார்வை பார்த்து அடங்கினான். அந்தப் பார்வைக்கு அர்த்தம் என்னவென்பதை கடலில் முன்னலையைத் துரத்திவரும் பின்னலைக்கு மட்டும் தான் தெரிந்திருக்கும்.

சாயங்காலம் பள்ளிக்கூடம் விட்டு மலர்விழி வீடு திரும்பியிருந்த போதும் நிலைமை மாறியிருக்கவில்லை. காரண காரியந் தெரியாமல் நடந்த சண்டையில் அம்மா சத்யா காய்ச்சலாகிக் கிடந்தாள். படுத்துக் கிடந்தவளிடம் “என்னம்மா? ஆஸ்பத்திரிக்கு போவுமா?” என்றாள்

மலர்.

"ஆமாமா. ஆ..வுன்னா நீ அவள ஆஸ்பத்திரிக்கு கூட்டிட்டு போயிடு. நா கெடந்து அவள கொடும படுத்துறேனு ஊரெல்லாம் சொல்லிக்கிட்டு திரிவா. ரெண்டு அடி அடிச்சதும் ஓன் அம்மாக்கு மொத்தமா முடியாம போய்டும் பாரு. அவ நல்லா நடிக்கிறா?" என்ற நாராயணன் வீசுவீசென்று துண்டை உதறிக்கொண்டு வாசலை நோக்கி நடந்தார். அவர் திரும்பிச் செல்லும் திசையை வைத்தே அவர் எங்கே செல்கிறார் என்றும், வரும்போது எப்படி திரும்புவார் என்றும் மலரால் எளிதாகத் தீர்மானிக்க முடிந்தது.

## -அத்தியாயம் : 6-

இந்த பகுதிகளில் உள்ள ஒரு பெரும் ஒற்றுமையே ஒவ்வொரு குடும்பத்தின் சந்தோஷமும் துக்கமும் அநேகமாக பொதுவான காரணங்களைக் கொண்டதாகவே இருக்கும். இலங்கை கடற்படை மீனவர்களை பிடித்துச் செல்வதிலிருந்து கணவன் மனைவியைப் போட்டு அடிப்பது வரை நீங்காத துயரங்களிலிருந்து எந்த விடுதலையும் இல்லை. கொண்டாட்டங்களைவிட பிழைப்பும் வறுமையுமே இவர்களைச் சுழற்றியடித்தபடி இருந்தன.

வாங்கிய அடியில் படுத்திருந்த சத்யாவின் முதுகு புடைத்து வீங்கியிருந்தது. ரத்தக்கட்டு ஏற்பட்டிருக்கலாம் என்று பெரிய ஆஸ்பத்திரியில் வாங்கிவைத்திருந்த தைலத்தை முதுகில் தேய்க்கச் சொல்லி மலரிடம் நீட்டினாள். மலர் வலிகரைய தைலத்தை நீவிவிட்டபிறகு, சோறு ஆக்க வேண்டும் என்று எழுந்து அடுப்படிக்குள் சென்றாள். போன தகப்பன் திரும்ப வந்தால் பசியாற தட்டில் என்னமாவது இருக்கவேண்டும். இல்லையென்றால் போடுகிற கூச்சலில் ராத்திரி தூக்கமும் தொலையவைத்து விடுவார்கள். பல நாட்களில் இப்படியே பொழுது அடைய மலரின் மனம் இறுகிவிட்டிருந்தது. ஒவ்வொரு நாளும் நிம்மதியின்மையும் பெருகிவிட்டது. அவலைப் பொறுத்தவரை ஒரே போக்கிடம் பள்ளிக்கூடமும் சூசையும் தான்.

அடுத்த நாள் காலை சூசை கொஞ்சம் சீக்கிரமாகவே வீட்டைவிட்டுக் கிளம்பினான். வெயில் பரப்பிக் கிடந்தாலும் மெதுவாகவே நடந்து கொண்டிருந்தான். ஆனாலும் மலர்விழி அந்த நேரத்தில் வரவில்லை. யோசித்துக் கொண்டே பள்ளிக்கூடம் வரைக்கும் நடந்து வந்துவிட்டான். வகுப்பறைக்குள் வந்ததும் மலர் உட்கார்ந்திருக்கும் இடத்தைக் கவனித்தான். அவள் வந்திருக்கவில்லை. ஏமாற்றம் பொங்கி வழிய, தன் கூட்டாளிகளோடு பூவரசு மரத்தடியில் உட்கார்ந்து கதையடிக்க ஆரம்பித்திருந்தான் சூசை.

அடுப்பில் குழம்பு கொதித்துக் கொண்டிருந்தது. ஏனோ தெரியாமல் சூசையுடன் முதன்முதலில் பேசியதை நினைத்துக் கொண்டாள் மலர். அப்பா கடலுக்குச் செல்லும் நேரங்களில் மட்டுமே கொஞ்சம் நிம்மதியாக இருக்க முடிகிறது. அவளுடைய அப்பா இரவில் வேறு எங்காவது தங்கிவிடக் கூடாதா என்று நினைத்துக் கொண்டே பாத்திரங்களை கழுவி வைத்துக் கொண்டிருந்தாள். சிறிது நேரத்தில் பக்கத்து வீட்டு வள்ளி, மலர்விழியின் அம்மாவைப் பார்க்கவரும் சாக்கில் புளி கடன்கேட்க வீட்டுக்குள் நுழைந்தாள்.

“என்ன மலரு பள்ளிக்கூடம் போலயா நீ, அம்மாவ எங்க. ரசம் வைக்க கொஞ்சம் புளி இருந்தா எடுத்துத்தாயேன் சித்திக்கு”

"வாங்க சித்தி. அம்மா படுத்துருக்காக. ஒடம்புக்கு முடியல. புளி இருக்கானு பாத்துட்டு வர்றேன்"

"என்னடி ஆச்சு? காலைல சத்தம் கேக்குறப்பவே நெனச்சேன். இன்னைக்கும் அடிபுடியா?”

“என்னத்த செய்யச்சொல்லுற வள்ளி. கண்ணு மண்ணு தெரியாம அடிக்கிறாரு.”

“இங்க மட்டுமாடி நடக்குது? எல்லா வீட்டுலயுந்தான நடக்குது. போன வாரம் எம் புருசன் அடிச்சதுல கண்ணாடி வளயலு ஒடஞ்சு கைல குத்தின காயத்த பாரு”

சத்யாவும் வள்ளியும் பேசிக் கொண்டிருக்கும் போது மலர்விழி புளி எடுத்து வந்து வள்ளியிடம் கொடுத்தாள். அதைக் கையில் வாங்கிக் கொண்ட வள்ளி, “இந்தா. அஞ்சு ரூவா வச்சுக்க. புளி ஓசிக்கு வாங்குனா ஒறவு புளிச்சு போகும்னு சொல்லுவாக".

இவர்கள் இரு குடும்பமும் நெருங்கிய சொந்தமோ நெருங்கிய நட்பான குடும்பமோ இல்லை. எனவே புளியை வாங்கிக்கொண்டு பணத்தைக் கொடுத்து, கொடுத்த பணம் அதற்கு போதாது என்பதால் வார்த்தைகளால் மீதியை சரிகட்டிவிட்டு தன் வீட்டை நோக்கிச் சென்றாள் வள்ளி.

அந்தோணியின் படகிற்கு மற்றுமொரு ஆளை சம்பளத்திற்கு சேர்த்துவிட்டார் டேவிட். அந்தோணிக்கு கவலை மொத்தமாய் குடிகொண்டது. முதலாளி இல்லை என்றால் படகில் வேலைகள் கவனக்குறைவாக நடக்கும். வரும்படியில் சம்பளமே அதிகமாகப் போகும். மிஞ்சுவதைக் கொண்டு மற்ற செலவுகளைக் கவனிக்க வேண்டும். அதிலும் மீறி சிலோன் நேவியிடம் ஒருதடவை பட்டபாடே பெரும்பாடு. இன்னொரு தடவை லாஞ்சி மாட்டிக்கொண்டால் நொடிந்தே போய்விடுவோமே என்கிற கவலையும் மருந்து மாத்திரைகளும் அந்தோணியை பலமில்லாதவராக்கியது.

கடற்கரையில் வாழ்ந்த ஒவ்வொருத்தருக்கும் இப்படி பலவிதமான கவலைகள் சூழ்ந்து கொண்டிருந்தன. அவர்களால் எதிர்காலத்தைப் பற்றி எதுவுமே கனவு காண்க முடியவில்லை. நிகழ்காலத்தை துன்பமில்லாமல் தள்ளுவதற்கே அவர்கள் பெரும்பாடு பட்டுக் கொண்டிருந்tதார்கள். யாரிடமாவது வெளிப்படுத்தும் ஆறுதல் வார்த்தைகள்கூட அவர்களின் வேதனைகளை அதிகப்படுத்திக்

## -அத்தியாயம் : 7-

சூசை பள்ளியிலிருந்து வந்ததும் பையை சுவர் ஒரத்தில் வைத்துவிட்டு, அவன் நண்பர்களுடன் வெளியே சென்று விட்டான். இரவும் நேரம் கழித்தே வீட்டிற்கு வந்தான். அவன் வருவதற்கு முன்னால், அந்தோணி சாப்பிட்டு தூங்கியிருந்தார். சூசை சாப்பிட்டு முடித்து தூங்குமுன், "அம்மா, அடுத்த வாரம் பாம்பன்ல கிரிக்கெட் மேட்ச் நடக்குது. எங்க டீம் வெளையாட போறோம். எண்ட்ரி பீஸ் கட்டணும்மா. நாளக்கு காசு பார்த்து தருவியா?"

"அடுத்த வாரம் வெளையாட இப்பவே ஏன்டா காசு?"

"எண்ட்ரி பீஸ் முன்னாலயே கட்டணும். அப்பத்தான் எங்க டீம வெளையாட விடுவாய்ங்க. ஜெயிச்சதுக்கு அப்புறம் பாரு"

"சரி சரி காலைல வாங்கிக்க. ஓ வெளாட்ட நாங்கல்லாம் பாக்க வரலாமா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள் ஜோதி.

"காசு தந்தன்னா பாக்க வரலாம்" என்று பாயைத் தூக்கிக்கொண்டு படுக்கப் போனான் சூசை. ஜோதியின் முகத்தில் ரொம்ப நாட்களுக்கு பிறகு சிரிப்பைப் பார்க்க முடிந்தது. சூழ்நிலை சின்னஞ்சிறு சந்தோஷங்களுக்கு மனிதர்களை ஏங்க வைத்துக் கொண்டே இருந்தது.

காலையில் ஜோதியிடம் காசை வாங்கிக்கொண்டு நுழைவுக் கட்டணம் செலுத்தினது போக மிச்சக் காசை தன் பங்காக எடுத்துக்கொண்டு பள்ளிக்கூடத்திற்குச் சென்றான் சூசை. சூசையின் நண்பன் மணி, அடுத்த வாரம் நடக்கும் போட்டிக்கு இப்போதிருந்தே பயிற்சிக்குத் தயாராக வேண்டும் என்று முடிவு கட்டியவனாக மைதானத்தில் விளையாடிக் கொண்டிருந்தான். சுற்றிலும் ஆணும் பெண்ணுமாக சாலையைக் கடந்துபோகிறவர்கள் இவர்களை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மணிக்கு எதிராகக் களத்தில் நின்று கொண்டிருந்த சூசை, அவர்களில் தன்னை யாரும் கவனிக்கிறார்களா என்று பார்த்துக் கொண்டான். தண்ணீர் பிடிக்க குடங்களைத் தூக்கிக்கொண்டு வந்து நின்ற பெண்கள் கூட்டம் இவர்கள் விளையாட்டை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தது. மலர் அவர்களோடு நிற்கிறாளா என்றுதான் முதலில் தேடினான் சூசை. நீல நிறத் தாவணியில் காலிக் குடங்களைச் சுமந்துக்கொண்டு நிற்கும் பெண்ணை மலர்விழி என்று கருதிக்கொண்டு வழக்கத்தைவிட மிகுந்த வேகத்துடன் ரன்னெடுக்க ஓடினான்.

அது.. அது அவள் இல்லை. அவள் போல யாரோவொருத்தி. ச்சே.. அது மட்டும் மலராக இருக்கக்கூடாதா. மைதானத்தில் தான்

விளையாடுவதை அவள் எங்கேயோ இருந்து பார்த்துக் கொண்டிருந்தால் எப்படி இருக்கும். கற்பனைகளோடு சீறி வந்த பந்தை பறக்கவிட்டுக் கொண்டிருந்தான் சூசை. அதேநேரம் மலர்விழி தன் வீட்டை விட்டு வெளியே வரமுடியாமல் வயிற்றுவலியில் பாயில் சுருண்டு கிடந்தாள்.

விளையாடி முடித்துவிட்டு வீடு திரும்புகிற நேரத்தில் அவளது தெருவுக்கே சென்று மலரைப் பார்த்துப் பேசிவிடுவது என்ற முடிவில் இருந்தான் சூசை. அவளுக்கும் அந்த நினைப்பு இருக்குமா என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். அவன் எண்ணங்கள் போலவே அவளுக்குள்ளும் சிறு காதல் அலையடித்துக் கொண்டிருந்ததென்பதை யார் தான் அறிந்தார்கள்.

அடிவயிற்றைப் பிசைகிற வலியோடு புரண்டு படுக்க முடியாமல் கிடந்தவளுக்கு சூசை நினைவுக்கு வந்தான். அவன் எட்டி நின்று பேசுகிற வார்த்தைகளை தன் மனத்துக்குள்ளாகவே சொல்லிப் பார்த்துக் கொண்டாள். இரண்டு இதயங்களும் இருபது வீடுகளுக்கு இடைப்பட்ட தொலைவுக்குள் கிடந்து அல்லாடின. இந்த விளையாட்டு தொடங்கிய இடமோ நேரமோ பற்றி இருவருக்கும் அக்கறை இல்லை. ஆனால், இந்தத் தேடலும் பிரியமும் இருவரையும் குமையச் செய்துக் கொண்டிருந்ததை அறிந்தே இருந்தார்கள்.

சூசை அவள் வீட்டு வாசலை அடைந்திருந்தான். சத்தங்குடுத்து அழைக்கலாமா! உள்ளே நாராயணன் இருந்தால் என்ன செய்வது. மலருடைய அம்மா வந்துவிட்டால்? பள்ளிக்கூடத்துக்கு வரலையா என்று கேட்க வந்ததாகச் சொல்லித் தப்பிக்கலாம். இல்லை அவர்கள் ரெண்டுபேருமா இருக்கக்கூடாது. அவர்களுக்குச் சொல்ல சரியான சமயத்தில் வார்த்தைகள் எழாமல் என்னத்தையாவது உளறிவைத்தால் மொத்தமும் கெட்டுப் போய்விடும் என்று பயந்தான். நீண்ட நேரம் தெரு முனையிலே காத்துக் கிடந்துவிட்டு எதுவுமே செய்யாமல் தன் வீட்டை நோக்கி நடந்தான் சூசை.

இரவு வீட்டில் மூவரும் சாப்பிட்டு படுத்துத் தூங்க ஆரம்பிக்கும் போது, அந்தோணியும் ஜோதியும் படகு கடலுக்குப் போய்விட்டு வந்ததையும், அன்றைய வருமானத்தைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தோணி கடலுக்குச் செல்ல முடியாதது குறித்து வருத்தத்தோடே பேசினார். சூசை அடுத்த வாரம் நடக்கும் கிரிக்கெட் மேட்சில் தன் அணி ஜெயிப்பது போலவும், தங்கள்வெற்றியை முதல்முதலில் மலர்விழிகிட்டே சொல்வது போலவும், அவள் சந்தோசச் சிரிப்போடு அவன் கையைப் பற்றிக் கொள்வது போலவும் நனவிலியாக இருந்தான்.

கற்பனைப் புரவி கடிவாளம் போட விரும்பாமல் பாய்ந்து சீறியது. அதன் பிடறி மயிற்றைக் கையில் பற்றிக் கொள்வதாக நினைத்து இடுப்பில் இருந்து உருவிய கைலியை மேலேயிழுத்துப் போர்த்திக் கொண்டு உறங்கினான்.

## -அத்தியாயம் : 8-

"அந்தோணி, எப்புடிப்பா இருக்க? ஒடம்பு பரவால்லயா?"

"வாய்யா ராசா, இப்போ தேவல. மாத்தரதான் அதிகமா போட வேண்டியிருக்கு. ஜோதி, ராசாக்கு டீ போட்டுக் குடுமா"

"இல்ல தங்கச்சி. இப்ப வேணாம். இப்பதான் சாப்ட்டுட்டு வந்தேன். வர்றப்ப அந்தோணியப் பாத்துட்டுப் போலாம்னு வந்தேன்".

ராசா இப்படி சொன்னாலும், அவர் வந்திருக்கும் நோக்கத்தை அறிந்து, "ராசா, ஒனக்கே தெரியும். ஒங்காசக் குடுத்தர்லாம்னுதான் பாத்தேன். அதுக்குள்ள ஸ்லோன் நேவி புடிச்சுட்டு போயி பஞ்சாயத்தாயிப்போச்சி. லாஞ்சிக்கு வேற வேல வந்துருச்சு. கடசீல எனக்கும் முடியாம போய்டுச்சு. அதுனால ரெம்ப செலவுதான். அதாம்பா குடுக்க முடியல".

"எல்லாம் புரியத்தான் செய்யுது அந்தோணி. ஆனா வட்டி அதிகமாயிட்டே போகுதுல. வட்டியாவது நாளானதும் குடுக்க பாருப்பா. ஓன் நெலமையும் மோசமாதான இருக்கு. அதுனால அசலு கூட இப்ப அவசரமா தர வேணா".

"சரி ராசா. வட்டி எவ்வளோ வருதுனு சொல்லு. இந்த வாரம் தரப் பாக்குறேன்".

"பதினோராயிரம் ரூவா வருது. முடிஞ்ச அளவு நாளக்கு இல்லனா நாளக்கழிச்சு குடுக்கப் பாரு"

"இல்ல ராசா. கொஞ்சம் பொறுத்துக்க. சனி இல்லனா நாயித்துக் கெழம தரப் பாக்குறேன். லாஞ்சில நா போறதுல்ல. எல்லாரும் சம்பளத்துக்கு தான் போறாங்க. கையில என்ன மிஞ்சும்ன்னு உனக்குத் தெரியாதா"

“எல்லார் நெலமையும் ஒவ்வொண்ணு. நானு என்னச் செய்ய, சரி அந்தோணி. நா போய்ட்டு வர்றேன். தங்கச்சி போய்ட்டு வர்றேம்மா. ஆள நல்லா பாத்துக்க".

ராசா சென்றதும் அந்தோணி, "ஏழு லட்சம் செலவழிச்சு லாஞ்சிய வாங்குனதுக்கு, அப்பவே புத்திசாலித்தனமா வட்டிக்கு விட்டுருந்தா, காசும் நின்னிருக்கும், ஸ்லோன் நேவிட்ட அடி வாங்காமயாது தப்பிச்சுருக்கலாம். ஒடம்பும் நல்லா இருந்திருக்கும். இப்ப கடந்தான மிஞ்சிருக்கு"

“விடுங்க. என்ன எழுதிருக்கோ அதான நடக்கும். அப்ப கடத் தொழிலு நல்லா இருந்திச்சு. அதுனாலதான லாஞ்சி வாங்குனோம். இப்புடி நடக்கும்னு நம்ம என்ன கனவா கண்டோம்? நாம மட்டுமா இப்டி இருக்கோம்? எல்லாரு நெலமயும் இப்டிதான இருக்கு".

"இருந்தாலும் நம்ம நெலம ரெம்ப மோசமால இருக்கு. ஒரே நேரத்தில எல்லாப் பக்கமும் அடச்சுட்ட மாதிரில்ல இருக்கு"

அந்தோணி பேச்சை எல்லாம் காதில் வாங்கிகொண்ட ஜோதி மனசுக்குள்ளாக கலக்கமானாள். ஆம்பள உடம்பு முடியலன்னா தொழிலும் வருமானமும் படுத்துக்கிடுது. பொம்பளைக்கு எதுவும்ன்னா குடும்பமேல்ல படுத்துருது. பொங்கி ஆக்கித் தட்டி இந்த ஜீவன் மொத்தமும் கடல்சாரிகளுக்கு இணையா சளைப்பில்லாம உழைச்சித்தான் ஆவணும் சாகற வரைக்கும் என்று எண்ணிக்கொண்டே விளைக்கை திரி இறக்கினாள்.

ஞாயிற்றுக்கிழமை என்பதால் சூசை சீக்கிரமாகவே எழுந்துவிட்டான். சர்ச்சில் இருந்து ஒலித்த பிரேயர் சத்தத்தைக் காதில் போட்டுக்கொண்டவனாக விளையாட்டு நினைப்பில் வேகவேகமாக மைதானத்துக்குக் கிளம்பினான். பின்னாலே வந்து சத்தங் குடுத்த ஜோதி'டே.. ஒருவாய் சாப்பிட்டுப் போடா' என்றாள்.

"இல்லம்மா. நேரமாயிருச்சு. என்னத் தேடிகிட்டு இருப்பாய்ங்க. நா போகனும். ஆளு கம்மியானா வெளையாண்ட மாதிரிதான்" வேகமாக மணி வீட்டு வாசலுக்கு வந்தவன் திண்ணையில் உட்கார்ந்துக்கொண்டு சத்தம் கொடுத்தான். ஏற்கனவே நான்கு பேர் மணியைக் கிளப்ப காத்துக் கொண்டிருந்தார்கள். இன்னும் சிலர் வந்துக்கொண்டிருப்பதாக தகவலைப் பரிமாறிக் கொண்டார்கள். கடைசியில் ஒன்பது பேர் மட்டுமே சேர்ந்தனர் இன்னும் ரெண்டு பேருக்கு ஆள் இல்லாமல் என்ன செய்வது என்று கடும் யோசைனையாய் இருந்தான் மணி.

"எங்க வீடு பக்கத்துல இருக்க கருப்பன கூட்டிட்டு வரவா. கேட்ச்லாம் பாய்ஞ்சு பாய்ஞ்சு புடிப்பான். அப்டியே கடக்கர பக்கத்துல வேர யாராச்சும் இருந்தா கூட்டிட்டு வர்றேன்"

வேறு வழியில்லாததால் சூசை சொல்வதை அனைவரும் ஏற்றுக்கொண்டார்கள். அன்றைக்குப் பார்த்து கடக்கரையில் ஒருத்தனுமே சிக்கவில்லை. எல்லாரும் இராம்நாட்டில் புதுப்படத்துக்குப் போய்விட்டான்கள். கருப்பன் மட்டும் கைக்குத் தோதாகச் சிக்கினான். மொத்தம் பத்து பேரோடு விளையாடப் போய், அவர்களது அணி சின்னாபின்னமான தோல்வியைத் தழுவியது. யார் கேட்டாலும் ஆள் ஒண்ணு கொறவா இருந்துச்சு அதான் தோத்தோம்ன்னு சொல்லணும் என்ன என்று பேசிவைத்துக் கொண்டான் மணி,

சூசையாவது நிலைத்து நின்று ஆடியிருப்பான். அவசரப்பட்டு ரன் அவுட் செய்ய வைத்துவிட்டான் கருப்பன். தான் கூட்டிக்கொண்டு வந்த ஆள் என்பதால் யாரையும் குற்றம் சொல்ல முடியவில்லை சூசைக்கு.

தோற்றது தோற்றதுதான். இதை வெளியேச் சொல்ல முடியாது, முக்கியமாக மலர் கிட்டே சொல்லவே கூடாது என்று முடிவுபண்ணிக் கொண்டான். இந்த நினைப்புகளோடு ஊரைப் பார்த்து நடந்துக்கொண்டிருந்தவனை பின்னால் இருந்து அடையாளங் கண்டுபிடித்து அழைத்தான் ராசா.

“அந்தோணி மகன் சூச தான, ஒன் அப்பா இந்த வாரம் காசு தர்றதா சொன்னாப்ல. நேத்து வேர்கோட்டுக்கு வந்தேன். கெடக்கல. இன்னைக்கு சாயங்காலம் வர்றேன்னு சொல்றியா?” சரி என்று தலையாட்டிவிட்டு வீடு வந்து சேர்ந்தான் சூசை. வந்ததும் ராசா சொன்ன விஷயத்தை மட்டும் ஜோதியிடம் சொல்லிவிட்டு, கால்கொள்ளாதவனாக உடனுக்குடனாக வெளியே கிளம்பப் பார்த்தான் சூசை. ஒரு தோல்வியைச் சமாதானப் படுத்திக் கொள்ள வலுவான காரணம் இருந்தும் அவன் அந்த அஸ்திரத்தைப் பயன்படுத்த விரும்பவில்லை.

பொழுதுக்கும் சுவரில் சாய்ந்தே உட்கார்ந்து முதுகு வலியெடுத்ததால், பாயில் காலை இழுத்து படுத்துக் கொண்ட அந்தோணி ராசா வரும் விசயம் பற்றி ஜோதியிடம் வாயெடுத்தார். “ஜோதி, ராசாக்கு குடுக்க எட்டாயிரந்தான் ரெடி பண்ண முடிஞ்சுச்சு. நேத்து கடலுக்கு போய்ட்டு வந்து வச்ச காசு எவ்வளோ இருக்கு?"

"நாலாயிரம் இருக்கு. ஆனா, ஆஸ்பத்திரிக்குப் போக, மருந்து வாங்கனு. அதுக்கே மூனாயிரம் வந்துருமே"

"பரவால. கொஞ்ச மருந்து வாங்குவோம். அடுத்த வாரம் வர்ற காசுல மிச்சத்த வாங்குவோம். அதுல மூனாயிரம் குடு. ராசாக்கு வட்டிய குடுத்துருவோம்".

மாலை நேரம் ராசா வந்ததும் பதினோராயிரம் ரூபாயை கொடுத்தார். ராசாவிடம் இருக்கும் சீட்டில் குறித்துக் கொண்டும், அந்தோணியிடம் இருக்கும் சீட்டிலும் குறித்துக் கொடுத்தார். அன்று இரவு ரொம்ப நாட்களுக்கு பிறகு சூசை புத்தகத்தை எடுத்து படித்தான். இன்னும் சில தினங்களில் காலாண்டுத் தேர்வு ஆரம்பிப்பதால், படித்தாக வேண்டிய கட்டாயத்தில் புத்தகத்தை விரித்து உட்கார்ந்தான். கவனம் அடிக்கடி சிதறிக் கொண்டே இருந்தது. ஒரு நிலையான மனநிலையில் அவனால் படிக்க முடியவில்லை.

அடுத்த நாள் படகை கடலுக்கு அனுப்புவது குறித்தும், சம்பளத்திற்கான ஆட்களுக்கு ஏற்படும் தட்டுப்பாட்டைக் குறித்தும் அந்தோணி ஜோதியுடன் விவாதித்துக் கொண்டிருந்தார். தான் கடலுக்கு செல்லும் பொழுது இருந்த மனநிலையை விட இப்பொழுது அதிகமான

கவலையுடனே இருந்தார் அந்தோணி. சந்தோஷம் அவர்களை விட்டு கொஞ்சம் கொஞ்சமாக விலகி ஓடிக் கொண்டிருந்தது.

காலாண்டுத் தேர்வு முடிந்து எல்லோரும் விடுமுறைக்குத் தயாராகி விட்டிருந்தனர். சூசை எப்படியாவது பாஸானால் போதுமென்று எழுதியிருந்தான். மலர் அந்த அளவைக் கூட எட்டுவாளா என்று தெரியாது இருந்தாள். கடைசிப் பரிச்சையும் முடிந்தது. பள்ளிக்கூடத்தில் இருந்து வெளியில் வந்த மலர் தானே முதல் ஆளாக சூசையிடம் பேச்சுக் கொடுத்தாள்.

“சூச, பரிச்சைலாம் எப்டி எழுதிருக்க?"

“ஓரளவுக்கு எழுதிருக்கேன். தமிழ் மட்டுந்தான் நல்ல எழுதுனேன். மத்த பாடத்துல பாஸ் ஆயிருவேனானு தெரியல."

"ம். நானு அப்டிதான் எழுதிருக்கேன். ஒன் அப்பா எப்டி இருக்காப்ல? இப்ப பரவாலயா?"

"இப்ப பரவால. அவரே எல்லா வேலையும் பாக்க ஆரம்பிச்சிட்டாரு. ஆனா முன்ன மாதிரி கடலுக்குப் போறதுல்ல"

பேச்சை அதற்கு மேல் எப்படி நீட்டிக்க என்று தெரியாமல் இரண்டு பேருமே மௌனமாக நடந்தார்கள். அவள் அப்பாவைப் பற்றி விசாரிக்கலாமா என்று யோசித்தான் சூசை. நல்ல விசயங்கள் எதுவுமே இல்லாதவள்கிட்டே வலியைக் கீறிவிடுவதாக எதையாவது கேட்டுவிடக் கூடாது என்று வார்த்தைகளை அடக்கிக் கொண்டான் சூசை. பள்ளிக்கூடத்தின் வெளிவாசலை அடைந்திருந்தார்கள் இரண்டு பேரும். அங்கிருந்தே நடக்கத் தொடங்கி வீட்டை அடையும் வரை இருவரும் வாய் திறந்து எதுவுமே பேசிக் கொள்ளவில்லை. ஆனால் அவர்கள் பேசிக்கொள்ளவேயில்லை என்றும் சொல்லிவிட முடியாது. பேச்சு என்பது வார்த்தைகள் மட்டுமா என்ன?

## -அத்தியாயம் : 9-

"காசு குடும்மா. எனக்கு தல வலிக்குது. போயி மாத்தர வாங்கிட்டு வர்றேன்"

"ஏன்டி என்னடி ஆச்சு?"

"என்னனு தெரியலமா.. போயி மாத்தர வங்கிட்டு வந்து போட்டுட்டு கொஞ்ச நேரம் தூங்கலாம்னு பாக்குறேன்"

அம்மாவிடம் காசு வாங்கிக்கொண்டு கடைக்குப்போய் மாத்திரையை வாங்கி வந்தாள் மலர். இருந்த சக்கரையையும் காப்பித்தூளையும் வைத்து ஒரு காப்பி போட்டு மாத்திரையையும் சேர்த்து விழுங்கினாள். மனத்தின் கனம் இறங்கியதும் சிந்தனைகள் வேறோர் வேலையைத் துவங்குகிறது. இந்த சில வருடங்களில் உடலில் ஏற்படுத்தியிருக்கும் மாற்றங்கள் மலர்விழியை வனப்பானவளாகக் காட்டியது. கண்களுக்கு மை தீட்டுவதில்லை என்றாலும் அவளுக்கு கருகருவென இமை உரோமங்கள். உதட்டைச் சுழித்துச் சிரிக்கும்போது கன்னத்தில் குழிகூட விழுகிறது. மேலாடைகளின் இறுக்கம் அவை பழசாகிவிட்டதென்ற உண்மையை நினைவு படுத்தியது. புதுசுக்கு எங்கே போக? அக்கறையாகத் தன் உடலைப் பேணி, அழகூட்டும் எந்த வழிகளையும் அவள் மேற்கொள்ளவில்லை. ஆனாலும் அப்படி எந்த தேவையும் இல்லாத அழகு அவளுக்கு இயல்பாகப் பொருந்தி நின்றது. அது சூசை என்பவனின் நினைவுகளுக்குள் மூழ்கும்போது இன்னும் இன்னும் பேரழகாகி மிளிர்ந்தது. மின்விசிறிக்கு கீழே படுத்து உறங்கத் தொடங்கினாள் மலர்விழி.

“தட்ட்டங்” என்று தெறித்து விழுந்த பாத்திரச் சத்தம் அவளை உறக்கத்திலிருந்து பதறி எழச் செய்தது. கண்களைக் கசக்கிப் பார்க்கும்போது, தனது அம்மாவின் மொத்த மயிற்கற்றையும் அப்பா நாராயணன் கையில் வசமாகச் சிக்கி இருந்தது.

"ஏன்டி, ஒங்கொப்பனாடி தெனமு கடலுக்குப் போய்ட்டு வந்து காசு குடுக்குறான். என்னமோ ஒந்தம்பிக்கு காசு குடுத்துருக்க?'

"நா எங்கங்க குடுத்தேன்? ஒங்களுக்கு யாரு சொன்னது?'

"ஒங்கப்பந்தானடி கடக்கரைல ஏன் மாமாட்ட சொல்லிட்டு இருந்தான். எனக்கு தெரியாம குடுக்கலாம்னு நெனைக்கிறியா?"

"ரெண்டு நாள்ல தர்றதா சொன்னதாலதான் குடுத்தேன். நாளைக்கே வாங்கிர்றேன்".

"அவைய்ங்க சங்காத்தமே வேணாம்னுதானடி சொல்லிருக்கேன். யாரக்

கேட்டுடி குடுக்குற? ஒங்கப்பன்ட்ட நா கேட்டப்ப குடுத்தானா? ஏங்காச வாங்குறதுக்கு அவனுக்கு கூசலையா?"

சொல்லிக் கொண்டே சத்யாவை மீண்டும் அடித்துத் தள்ளி விட்டார். நாராயணன் அடித்த அடியில் சத்யாவின் பல் வழியே இரத்தம் கசிந்தது. கீழேவிழுந்த தன் அம்மாவைத் தூக்கச் சென்ற மலர்விழி, அவளின் கலைந்த மாராப்பை எடுத்து உடலை மூடிவிட்டாள். மீண்டும் அடிக்கப் பாய்ந்த நாராயணனை உட்கார்ந்து கொண்டே தடுக்க முயன்றாள், மலர்விழி. மகளைக் கவனமாகத் தவிர்த்துவிட்டு ஒன்றிரண்டு அடியை கவனமாக சத்தியா மீது இறக்கினார் நாராயணன்.

இந்தச் சத்தம் கேட்டு, அக்கம்பக்கத்திலிருந்து யாரும் வரப்போவதில்லை. அப்படியே வந்தால், அவர்களையும் நாராயணன் மோசமாக பேசுவார் என்று எல்லாருக்குமே தெரியும்.

பொண் பிள்ளை இருக்கிறாள் என்ற அழுத்தமே இல்லாமல் பச்சை பச்சையாகப் பேசிவிட்டு வீட்டைவிட்டு கிளம்பிப் போனார், நாராயணன். அவர் வெளியில் கிளம்பிப் போனதும் தன் கூந்தலை அள்ளி முடிந்து கொண்டு, வாயில் வழிந்த ரத்தத்தை காரி வாசலில் துப்பினாள் சத்யா. அழுது வீங்கிய முகத்தோடு வாசலில் உக்கார்ந்து புலம்பியவளை வீட்டிற்குள் எழுப்பிச் சென்று படுக்க வைத்தாள் மலர். நடந்த எல்லாவற்றையும் ஒரு நிகழ்படமாகத் தனக்குள் ஓட்டிப் பார்த்துக் கொண்டாள்.

‘ச்சே என்ன நாராசமான வார்த்தைகள். இதையெல்லாம் தாங்கிக் கொண்டு எப்படி உயிரோடு இருக்கிறாள் அம்மா. அவளும் என் வயதில் என்போலத் தானே இருந்திருப்பாள். அவளுக்கும் கனவும் காதலும் இருந்திருக்குமா! எல்லாம் காணாமல்போய் இப்படி நாயடி பேயடியைச் சகித்துக் கொண்டு வாழ்கிறாளே! ஒருவேளை நம் கதியும் நாளைக்கு இதேதானா!’ யோசித்து யோசித்து தன்னையும் தன்னுடைய இந்த பெண்ணுடலையும் வெறுத்தாள் மலர்விழி.

சிறிதுநேரம் கழித்து, வீட்டிற்கு வெளியே கிடந்த கல்லில் வந்து குத்தவைத்துக் கொண்டிருந்தார் நாராயணன். இன்னும் மலையேறாத சாமி மாதிரி கோபம் அவர் உச்சிமண்டையில் ஏறி நின்று அடித்துக் கொண்டிருந்தது. அவராகவே தன்னந்தனியாகப் பேசத் தொடங்கினார்.

"அவ அப்பனோட காசுனு நெனச்சுட்டா போல. நா சம்பாரிச்ச காச அவய்ங்கட்ட தூக்கி குடுக்குறா. நா கேட்டா அவய்ங்க தருவாய்ங்களா?"

"எதுக்குயா அவுங்களயே திட்டிக்கிட்டு திரியுற? அவரால முடிஞ்ச அளவு செஞ்சாருல. முடியாத காலத்துல எங்கய்யா போவாரு?"

"ஆமாமா. ரெம்ப முடியாத காலம்டி ஒங்கப்பனுக்கு. அவன் வயசுல இருந்த பாதி பேர தூக்கி மண்ணுக்குள்ள வச்சாச்சு. இன்னமும் ஒன் அப்பன் வீட்டுக்கும் கடக்கரைக்கும் ஒடிக்கிட்டு திரியுறான்."

இதுவரை இல்லாத கோபம் சத்யாவிற்கு வந்தது. தனது தந்தை சாகவில்லை என்பதை ஒரு வருத்தம்போல நாராயணன் சொல்வதை கேட்டதும், கோபத்துடன் வெளியேவந்து நாராயணன் முன்னால் நின்று பேச ஆரம்பித்தாள். "ஒன் வாயில விழுந்ததாலதான்யா என் அப்பா இருந்த லாஞ்சிலயும் நஸ்டம் வந்து வித்துட்டு இப்போ நீயெல்லாம் மட்டு மரியாத இல்லாம பேசுற அளவுக்கு போயிட்டாரு. நீயெல்லாம் நல்லாவே இருக்க மாட்ட" என்று சொல்லிக் கொண்டு மண்ணை அள்ளித் தூற்ற ஆரம்பித்தாள்.

ஒரு கையால் மண் தன்மேல் விழுந்து விடாமல் தடுத்துக் கொண்ட நாராயணன், அவள் மண்ணைத் தூற்றி முடித்ததும் அடிக்க எழுந்தார். மலர்விழி அவள் அப்பாவிற்கும் அம்மாவிற்கும் இடையில் இருந்து அடிக்க விடாமல் தடுக்கப் போராடினாள். இப்பொழுது சத்யாவும் விலகாமல், "விடுடி, உங்கப்பங்கூட இருக்கதுக்கு நா செத்துப் போலாம்"என்று குதித்தாள்.

காலையில் கடக்கரை பக்கமாக வந்த சூசை மலர்விழியைக் காணும் சாக்கில் அவளது வீடு இருக்கும் திசைப்பக்கமாக எட்டி நடந்தான். வந்த இடத்தில் சத்தம் கேட்டு சுதாரித்து நின்றவனை, மலரும் கண்டுகொண்டாள். இந்த இடத்தில், அதுவும் இந்நேரத்தில் சூசை வந்து தன் வீட்டுக்கு முன்னால் வந்து நின்றது மலர்விழியைச் சங்கடத்திற்குள்ளாக்கியது. அவமானத்தில் கூனிக் குறுகிப் போனாள். உடனுக்குடனாக அவள் மனநிலையைப் புரிந்தவனாக சத்தமில்லாமல் அங்கிருந்து நகர்ந்து சென்றான் சூசை.

## -அத்தியாயம் : 10-

அந்த சூழலில், அப்படியோர் நிலையில் மலரைச் சந்தித்தது அவனக்குச் சங்கடமாகவே இருந்தது. ஏதோ ஒரு காரணத்தைச் சொல்லி அவளைக் கண்டுவிட்டால் போதுமென்று இருந்தது மனம். ஆனால், அவன் எதிர்பார்த்தது வேறு. நடந்தது வேறு. மலர்விழியும் திணறித்தான் போனாள். தான் திரும்பிவந்த பிறகு சண்டை வலுத்து, மலர்விழியின் அம்மா, இந்த மனுசங்கூட இனி வாழ முடியாது. நா எங்கப்பா வீட்டுக்குப் போறேன்" என்று சொல்லிவிட்டு வீட்டைவிட்டுப் புறப்பட்டுப் போனதை தெருக்காரர்கள் பேச்சில் இருந்து தெரிந்துக் கொண்டான்.

அம்மாகூடே அவளும் போயிருப்பாளா, இல்லை இங்கேயே இருப்பாளா என்று மாற்றி மாற்றி எண்ணிக்கொண்டிருந்தான் சூசை. எந்த பதிலையும் கண்டுபிடிப்பதற்கு திராணி இல்லாதவன் போல் தனித்து, வீட்டுக்குள் ஒரு மூலையில் முடங்கிக்கிடந்தான் அவன். வெளியே சென்றிருந்த அந்தோணியும் ஜோதியும் உள்ளே வந்தனர். டீ.வி கூடப் பார்க்காமல் ஓரமாக உட்கார்ந்திருப்பவனை விநோதமாகப் பார்த்து,"என்னடா சூச, ஒடம்புக்கு ஏதும் முடியலயா?" என்று அந்தோணி கேட்டார்.

"ஒன்னும் இல்லப்பா. இப்பதான வந்தேன், அதான் சும்மா உக்காந்து இருக்கென்"

அவன் சொன்னதையும் கேட்காமல் அருகில் வந்து சூசையின் நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள் ஜோதி. நெற்றி சூடாக இல்லையென்று உணர்ந்ததும் அடுப்படிக்குள் சென்றாள். டீவியைப் போட்டுவிட்டு நாற்காலியில் அமர்ந்த அந்தோணி மகன்கிட்டே பள்ளிக்கூடம் படிப்புகள் பற்றிப் பேச்சுக்கொடுத்தார்.

"என்னடா சூச, எப்ப பள்ளிக்கொடம் திரும்ப தொறக்குறாய்ங்க?"

"அடுத்த வாரம் திங்கக் கெழம"

“என்னத்தயோ நல்லா படிச்சி கிடிச்சி நல்ல வேலைக்கிப் போயி நீயாது நாலு காசு சம்பாதிக்கப் பாரு”

ஜோதி எல்லாருக்கும் சாப்பாடு எடுத்துவந்து வைத்தாள். எல்லோரும் சாப்பிட்டு முடித்ததும், அந்தோணி மாத்திரையை விழுங்கிவிட்டு படுக்கைக்குச் சென்றார்.

விடிந்ததும் சூசை எழுந்தவுடன் அந்தோணி, "டே சூச. கடக்கரல டேவிடு

நிப்பான். அவங்கூட வத்தைல லாஞ்சிக்கு போயி சரக்க அளவு போட்டுட்டு வந்துரு. சம்பளத்த சாயந்தரமா வந்து வாங்கிட்டு போகச் சொல்லு"

சூசை மீனவக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவன் என்றாலும் அடிக்கடி படகுக்கு வந்தவன் இல்லை. கடற்கரையில் அவன் சித்தப்பா டேவிட் அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தார். இருவரும் படகில் ஏறியதும், "சூச, நா எஞ்சின ஸ்டாட் பண்றேன். நீ சுக்கான்ல இருந்துக்க. சுக்கான நேராப் புடிச்சுக்க. ஸ்டாட் பண்ணிட்டு நான் பொரகத்துக்கு வார வர நேராப் புடிச்சுக்கிட்டா போதும்".

வத்தையில் எஞ்சினை இயக்க ஆரம்பித்ததும், படகு கடலுக்குள் செல்ல ஆரம்பித்தது. இயக்க ஆரம்பித்து கொஞ்ச நேரத்திலேயே இவனால் சுக்கானை நேராகப் பிடிக்க முடியவில்லை. வத்தை அதற்குள் அங்கும் இங்குமாக ஓடியது. சிறிது நேரத்தில் டேவிட் வந்து சுக்கானைப் பிடித்துக் கொண்டார். வத்தை படகிற்கு அருகில் வந்ததும், இவர்களின் படகில் இருந்தவர்கள் பேசுவது இவர்களுக்கு கேட்டது.

"டே நங்கூரத்த எடுத்துப் போடு. அம்மார எலக்குடா".

"அந்த லாஞ்சியோட எல அம்மார அறுக்குர மாதிரியாடா போடுவ. நங்கூரத்த தள்ளிப் போடுடா".

நங்கூரத்தைக் கடலில் போட்டு கயிறைப் பிடித்துக் கொண்டிருந்த மனோ, குறிப்பிட்ட அளவு தூரம் வந்ததும் கயிறை அணியத்தில் சுற்றி வாரியில் கட்டினான். அந்த வேளை முடிவதற்கும் சூசை மற்றும் டேவிட் படகிற்கு அருகில் வருவதற்கும் நேரம் சரியாய் இருந்தது.

படகு நங்கூரமிடப்பட்டு இருந்தாலும் அது அலைக்கேற்ப ஆடிக் கொண்டே இருந்தது. அவனால் படகிற்குள் ஏதாவது ஒன்றை பிடிக்காமல் நிற்கவோ நடக்கவோ முடியவில்லை. இருமுறை தடுமாறி கீழே விழப்போனான். ஆனாலும் படகில் இருப்பவர்கள் எதையும் பிடிக்காமல் எந்தவொரு தடுமாற்றமும் இல்லாமல் இருந்தது இவனுக்கு ஆச்சர்யமாகவே இருந்தது.

இறால் மற்றும் கணவாய் அளவு போடும்போது அருகில் இருந்து பார்த்துக் கொண்டிருந்தான். வியாபாரியிடம், "அப்பா, அப்பறமா வந்து உங்கள்ட்ட காசு வாங்கிக்கிருவாங்களாம். நிறுவய மட்டும் குறிச்சு தரச் சொன்னாங்க".

வியாபாரி சீட்டில் எழுதிக் கொடுத்ததை வாங்கிக் கொண்டவன் சம்பளத்தை சாயங்காலம் வந்து தனது தந்தையிடம் வாங்கிக்

கொள்ளுமாறு கூறி விட்டு வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தான். இவனுடைய சிநேகத்தை மிகவும் விரும்பியது போல் படகு அலையில் மிக சந்தோஷமாக ஆடிக் கொண்டிருந்தது. முதல் சிநேகத்தை விரும்பிய அந்த படகு இரண்டாவது சிநேகத்தை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தது.

சாயங்காலம் வீட்டிற்கு வந்திருந்த நால்வருக்கும் சம்பளத்தைக் கொடுத்துவிட்டு நாற்காலியில் அமர்ந்திருந்தார், அந்தோணி. கையில் வரும் பணத்தில் கடைசியில் பாதி கூட மிஞ்சவில்லை. இதுதான் எதார்த்தம் என்று மனம் கொஞ்சம் கொஞ்சமாய் சமாதானம் கொண்டது.

## -அத்தியாயம் : 11-

திங்கட்கிழமை பள்ளிக்கு போகுமுன் இரண்டு முறை படகிற்குச் சென்று வந்தான். படகுக்கும் அவனுக்குமான உறவு தொடங்கி விட்டிருந்தது. காலாண்டுத்தேர்வு விடுமுறை முடிந்த முதல் நாள் பள்ளிக்குப் போனதும் மலர்விழியின் இடத்தைப் பார்த்தான். மலர்விழி அங்கே அவள் இடத்தில் இருந்தாள். வகுப்பறையின் பின்னால் அவன் இருந்ததால், மலர்விழியால் அவனைப் பார்க்க முடியவில்லை. உணவு இடைவேளை நேரத்தில் மலர்விழியுடன் பேசவேண்டும் என்று நினைத்தான். பல்வேறு சந்தர்ப்பங்களை அவன் கற்பனை உருவாக்கிக்கொண்டே இருந்தது. ஆனாலும் அவன் கற்பனை செய்த எந்தவொரு சந்தர்ப்பமும் சரியாக வருமென்று அவனுக்குத் தெரியவில்லை. இடைவேளை முடிந்ததும் ஏதோவொரு தைரியத்துடன் மலர்விழி இடத்திற்கு சென்று, “எங்க லாஞ்சில ஆளு வரல. ஒன் அப்பா வருவாங்களா?"

ஏதோவொன்று பேசவேண்டும் என்று கேட்டுவிட்டான். கேட்டதும் மலர்விழியின் முகம் சற்று மாறியதை அவனால் கண்டு கொள்ள முடிந்தது. இருந்தாலும் மலர்விழி, "எனக்கு அதப்பத்தி எதுவும் தெரியாது. ஒன் அப்பாவ கேக்க சொல்லிப் பாரு".

சொல்லிவிட்டு தனது செருப்பைக் காலில் மாட்டினாள். தையல் விட்டிருந்த செருப்பை சூசையிடமிருந்து மறைப்பதற்கு முயற்சி செய்தும், சூசை பார்த்ததை அவள் கவனித்து விட்டாள். சூசைக்கு அவள் மீது அன்பைக் கடந்த பரிதாப உணர்ச்சி வந்து ஒட்டிக்கொண்டது. ஆனால் அது அவளைச் சங்கடப் படுத்தும் என்று புரிந்துக்கொண்டான். அதற்குமேல் எதுவும் பேச விரும்பாதவளாக மதியச் சாப்பாட்டை எடுத்துக் கொண்டு தனியாகப் போய் உட்கார்ந்துகொண்டாள் மலர்விழி.

விடுமுறை நாட்களில் வழக்கம்போல காலை படகுக்குச் சென்றான் சூசை. இப்பொழுது படகில் நிற்பதற்கும் நடப்பதற்கும் கற்றுக் கொண்டான். வேலைகளும் அவனுக்கு ஓரளவு தெரிந்தது. நிறுவை முடிந்து சீட்டை வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் போவது வரை அவனுடைய வேலை என்றானது. அன்று சாயங்காலம் சம்பளம் வாங்க வரும்போது அடுத்த நாள் கடலுக்கு வர முடியாது என்று நால்வரில் ஒருவர் சொன்னதும், வேறு யாராவது கிடைப்பார்களா என்று பார்த்துவர அந்தோணி வெளியே கிளம்பிச் சென்றார். ஆள் குறைகிறது என்றதுமே சூசைக்கு மலர்விழியின் தந்தை நாராயணன் ஞாபகம் வந்தது. ஆனாலும் அவன் அதைப் பற்றி எதுவும் கூறாமல் அமைதியாக

இருந்தான்.

மலர்விழியின் தந்தையிலிருந்து தன்னுடைய சிந்தனையை மலர்விழிக்கு திருப்பினான். திங்கட்கிழமை அவளிடம் கேட்டபோது அவளிடம் ஏதாவது பேசவேண்டும் என்று கற்பனை கலந்துதான் கேட்டான். ஆனால், ஒருவேளை அதுவே நடந்து விடுமோ என்று நினைத்தான். இரவு அந்தோணி வந்து படகில் செல்ல ஆள் யாரும் கிடைக்கவில்லையென்று சொன்னார். நாராயணனிடம் கேட்டிருப்பாரா என்று நினைத்துக் கொண்டிருந்தாலும், அதைப் பற்றி ஏதும் வாய்திறக்காமல் அமைதியாகவே இருந்தான்.

அடுத்தநாள் காலையில் வந்த மூவரும், "இன்னக்கி போக வேணாம்பா. லஸ்கரு யாரும் கெடக்கல. இன்னக்கி ஒரு நா போட்டு கட்டுல கெடக்கட்டும். அடுத்த மொற போலாம்" என்றார் நாராயணன். கேட்டுவிட்டு மூவரும் திரும்பிச் சென்றுவிட்டனர். படகு கடலுக்குச் செல்லாத ஏமாற்றம் அந்தோணி முகத்தில் அப்பட்டமாக தெரிந்தது. லாஞ்சி கட்டில் கிடந்ததால் சூசைக்கு எந்த வேலையும் இல்லை. மணியின் கூட்டாளிகள் அவனை விளையாடக் கூட்டிப் போக, ஜோதி வழக்கம்போல் அடுப்படி வேலையை செய்து கொண்டிருந்தாள். சூசை வீட்டுக்கு திரும்ப வரும்பொழுது, அவன் சித்தப்பா டேவிட் அந்தோணியுடன் பேசிக் கொண்டிருந்தார்.

"சூசய லீவு நாள்ல கடலுக்கு போக சொல்ல வேண்டியதுதான. லீவு நாள்ல போறப்ப, ஸ்கூலுக்கு லீவு போட வேணாம்ல"

"இல்லடா. அவன எதுக்கு அனுப்பிகிட்டு? அவனுக்கு நங்கூரம் போட்டுருக்க லாஞ்சிலயே நிக்க முடியலனு சொல்றாய்ங்க. வெலங்க போனா அவனால சமாளிக்க முடியாது. ஒரு நா கடதான. போயிட்டு போகுது"

டேவிட் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு வீட்டிற்கு கிளம்பிச்சென்றார். அவர் சென்றதும் ஜோதி, "வேற யாருங்கெடக்கலையா? யாராவது வரலனா நம்ம லாஞ்சி கடலுக்கு போக முடியல. இப்புடியே இருந்தா எப்புடி?"

"நானும் என்ன பண்றது? நேத்து நானு எவ்வளோ அலஞ்சு திரிஞ்சாலும் ஒரு பயலும் கெடக்கல. கெடச்சாலும் சம்பளம் அதிகமா கேக்குறாய்ங்க. பேசாம லாஞ்சிய வித்திரலாமானு யோசிக்கிறேன்"

"அத வித்துட்டா என்ன பண்றது? வேற என்ன வேல பாக்குறது?"

ஏதோவொரு விரக்தியில் படகை விற்று விடலாம் என்று சொன்னாலும்,

அதற்கு அடுத்து எதுவும் செய்ய முடியாது என்று ஜோதி சொல்லியது அவருடைய விரக்தியை மேலும் அதிகப்படுத்தியது. இந்தத் தொழிலைச் சேர்ந்த எவராலும் அடுத்த தொழிலுக்கு மாறுவது என்பது ரொம்ப கடினமானது என்று அவருக்கு தெரிந்திருந்தது. அதிலும் கடன் இருக்கும் யாராலும் வேறு எதுவுமே செய்ய முடியாது.

## -அத்தியாயம் : 12-

சத்யா தனது தந்தையின் வீட்டிற்குச் சென்று இரண்டு வாரங்களுக்குப் பிறகு தன் வீட்டிற்குத் திரும்பியிருந்தாள். கூடவே மலரும் வந்திருந்தாள். அவர்கள் வீட்டிற்குள் நுழையும்போது நாராயணன் வாசல் கல்லில் தான் குத்தவைத்து அமர்ந்திருந்தார். அவர் ஏதாவது பேசுவாரே என்ற பயத்தில் இருவரும் வீட்டிற்குள் நுழைந்தார்கள். நாராயணன் சத்தம் எதுவுமில்லாமல் வெளியே சென்று விட்டார். நாராயணன் சத்தமில்லாமல் சென்றது இருவருக்குமே ஆச்சர்யமாக இருந்தது. இருந்தாலும் இந்த அமைதி நீண்ட நாட்கள் நிலைக்காது என்று அவர்களுக்குத் தெரிந்திருந்தது.

மதியம் சாப்பிட வரும்பொழுதும் நாராயணன் எதுவும் பேசாமல் சாப்பிட்டு முடித்ததும் வெளியே கிளம்பி விட்டார். மலர்விழி சத்யாவிடம், "அம்மா. செருப்பு அந்து போச்சுமா. எவ்வளவு நாளுதான் நானு அந்து போனத போட்டுகிட்டு திரியுறது? காசு குடு புதுசு வாங்க."

"சாயங்காலம் வாங்கிக்கடி. எனக்குந்தான் புதுசு வாங்கணும். கடைக்கு நானும் கூட வர்றேன்".

சாயங்காலம் வந்த நாராயணனுக்கு சத்யா தேநீர் கொடுத்துவிட்டு, "என்னங்க, மலருக்கு செருப்பு அந்து போச்சு. எங்கிட்ட சுத்தமா காசு இல்ல. காசு இருக்கா?"

"எவ்வளோ வேணும்?'

"முன்னூறு ரூவா போதும்".

"சரி. கொஞ்ச நேரங்கழிச்சு வந்து தர்றேன்".

வெளியே சென்ற நாராயணன் சிறிது நேரம் கழித்து திரும்பி வந்து சத்யாவிடம் ஐநூறு ரூபாய் கொடுத்தார். அதை வாங்கிக் கொண்ட சத்யா மலர்விழியிடம் கடைக்குப் புறப்படச் சொல்லிவிட்டு தானும் தயாரானாள். கடையில் புதுசெருப்பு வாங்கிவிட்டு திரும்பி வரும்பொழுது சூசையின் நினைப்புதான் வந்தது மலர்விழிக்கு. நாளைக்கு அவன் தன் புதுச் செருப்பை பார்ப்பான் என்று நினைக்கும் பொழுது அவளுக்கு கொஞ்சம் மகிழ்ச்சியாகவே இருந்தது.

இரவு சாப்பிட்டு முடிந்ததும் நாராயணனும் வீட்டிற்குள்ளேயே படுத்துக் கொண்டார். வீட்டில் நடக்கும் பிரச்சனைகள் எல்லாம் ஓய்ந்துவிடும் என்று மலருக்கு ஏதோ ஒரு நம்பிக்கை பிறந்திருந்தது. நம்பிக்கையை விட அந்த ஆசையே அவளுக்கு அதிகமாக இருந்தது. காலையில் அவள் தூங்கி எழுவதற்குமுன், நாராயணன் எழுந்து கடலுக்குப் போயிருந்தார்.

கூடவே, தன் அம்மாவின் முகத்தில் பொலிவு உண்டாகியிருப்பதையும் கவனித்தாள்.

மலர்விழி தன் புதுச் செருப்பை அணிந்து கொண்டு பள்ளிக்கூடத்துக்குப் புறப்பட்டுப் போனாள். சூசை கண்ணில் படும்படி பாவாடையை ஏற்றிக் கட்டியிருந்தாள். கால்வீசி வீசி நடந்துபார்த்துக் கொண்டாள். ஆனால், அவன் அன்றைக்கு பள்ளிக்கூடம் பக்கமே வரவில்லை. மலர் தன் கற்பனையில் உருவாக்கிய எந்தவொரு சந்தர்ப்பமும் நிகழாத தன் துரதிஷ்டத்தை எண்ணி வருந்திக்கொண்டாள். இருந்தாலும் அன்றைய நாள் ஒரு வித புது நிம்மதியை அவளுக்குத் தந்திருந்தது.

எந்தவொரு முன்னேற்றமும் இல்லாமல் அந்த முழுவாரமும் கழிந்துவிட்டிருந்தது. சனிக்கிழமை காலை கடலுக்கு போக மூன்றுபேர் மட்டுமே வந்திருந்தார்கள். ரெகுலர் ஆட்களில் ஒருத்தர் மாற்று விசைப்படகில் தொழிலுக்குப் போய்விட்டார்.

"என்னது இது? இப்புடியே நடந்துட்டுருந்தா என்ன பண்றது? இன்னக்கும் லாஞ்சிய கட்டுல போட வேண்டியதானா"

"இல்லண்ண. இப்புடியே லாஞ்சிய அடிக்கடி கட்டுல போடக் கூடாது. நாங்க மூணு பேரா போய்ட்டு வர்றோம்"

"இல்லப்பா. அஞ்சு பேரு போற லாஞ்சில மூனு பேரு எப்புடி போவீக? இன்னக்கு ஒரு நா போக வேணாம். நாளக்கி வெளியூரு லஸ்கரு யாராச்சும் கெடக்குறாகளான்னாச்சும் பாக்குறேன்"

"இன்னக்கு மட்டும் வேணுனா சூசய கூட்டிட்டு போகவா? நாளக்கி வேற ஆளப் பாத்து கூட்டிட்டு போவோம்"

"வேணாம்பா. அவன மட்டும் கடலுக்கு அனுப்பவே கூடாது. கட தொழிலுல இருந்து அவனாச்சும் தப்பிச்சு போகட்டும்".

பேசிப் பார்த்தும் வேறு வழி இல்லாமல் வந்திருந்த மூன்றுபேரும் திரும்பிச் சென்றனர். ஆனாலும் ஆழ்கடலின் வெம்மையும், கூதலும் சூசையின் வரவை எதிர்பார்த்துக் கொண்டே காத்திருந்தது. சந்தர்ப்பங்களும் அதற்கேற்ப அமைந்து கொண்டே இருந்தாலும் அந்தோணி அவற்றை திசைதிருப்பி தன்னால் முடிந்த மட்டும் சூசையை கடலுக்குள் இறங்கவிடாமல் தடுத்துக் கொண்டே இருந்தார். அவர் பயந்தது கடல்தாயின் மடியில் தன் மகனை இறக்கிவிட அல்ல. அங்கே மேய்ச்சல் கொண்டிருக்கும் செந்நரிகளுக்கு தன் மகனும் இரையாகிவிடக் கூடாதன்ற கவலையே முதற்காரணமாக இருந்தது.

## -அத்தியாயம் : 13-

பொழுதுசாயும் நேரத்தில் சூசையின் தாத்தா வந்திருந்தார். கடற்கரை வழியாக நடந்தே வந்தவரை கண்டதும், அந்தோணி உட்கார்ந்திருந்த நாற்காலியில் இருந்து எழுந்து, அதை தன் மாமனாருக்குக் கொடுத்துவிட்டு, தான் திண்ணைக்கு இடம் மாறினார்.

"வாங்கப்பா. டீ போடட்டுமா?" ஜோதி தன் அப்பாவை உபசரித்தாள்.

"வேணாமா. இப்பதான் குடிச்சிட்டு வர்றேன். கேள்விப்பட்டேன், லாஞ்சிய கொஞ்சநாளா தொழிலுக்கு அனுப்பலயாம?"

"இல்ல மாமா. லஸ்கருங்க யாருங்கெடக்கல. இப்புடியேதான் அடிக்கடி லாஞ்சிய கட்டுல போட்டுர்றோம் ".

"ஏதும் முக்கியமான சேதி சொல்ல வந்தீகளாப்பா?"

"ஒன்னுமுல்ல. அடுத்த வாரம் பொதங்கெழம கருப்பையா மக கலியாணம். அதுக்கு போகணும். கைல மடில ஒன்னுமுல்ல. மோதெரம் திருப்பிட்டீகளானு தெருஞ்சுக்கலாமுனு வந்தேன்'

'இப்ப கஷ்டமா இருக்கேப்பா. லாஞ்சி கட்டுல கெடக்குறப்ப காசு ஏற்பாடு பண்ண முடியுமானு தெரியலயே"

"தெரியுதுமா. எங்கிட்ட ஒரு நாலாயிரம் இருக்கு. மிச்ச காச ஏற்பாடு பண்ணப் பாருங்க. பொதங்கெழமக்குள்ள லாஞ்சி மூணு கடலுக்கு போகுமுல்ல. அதுல எதாச்சும் மிஞ்சுதானு பாருங்க".

கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டு ஜோதியின் தந்தை கிளம்பினார். கிளம்பும்முன் சூசை கையில் சில்லரையாக காசு கொஞ்சம் கொடுத்து விட்டுப் போனார். சூசை திடீரென பணக்காரன் ஆனது போல உணர்ந்தான்.

ஜோதியின் அப்பா கிளம்பிச் சென்றதும் அந்தோணி, "என்ன பண்றதுனே தெரியல. அஞ்சு ரூவா சம்பாரிச்சா பத்து ரூவா செலவாகுது. இதுல அடிக்கடி கடலுக்கு வேற போறதுல்ல".

"அதுக்கு என்ன பண்ண முடியும்? இன்னும் மூணு கடலு இருக்குல்ல. வர்றத வச்சு எப்புடியாச்சும் ஏற்பாடு பண்ண பாப்போம். ஏழாயிரத்துக்குதான மோதெரத்த வச்சோம். வட்டியோட சேத்து ஏழாயிரத்து ஐநூறு இல்லனா அறநூறு வந்துருக்கும். அப்பாட்ட நாலாயிரம் வாங்கி மிச்சத்த நம்ம போட்டு மீட்ருவோம்". அடிக்கடி அடகு வைத்தது அவளுக்கு கணக்கு போடும் வித்தையை கற்றுத் தந்திருந்தது.

தொழில் நன்றாக நடந்தால் மூவாயிரத்து ஐநூறோ அறுநூறோ பெரிய விஷயமில்லை என்று அந்தோணிக்கு தெரியும். ஆனால் ஒவ்வொரு

நாளும் படகிற்கு ஆகும் செலவு மற்றும் சம்பளம் அவரை யோசிக்க வைத்தன. ஆனாலும் வேறு வழி எதுவும் தெரியாததால் அந்தோணி ஜோதி கூறியதை ஒத்துக் கொண்டு தலையாட்டிக் கொண்டிருந்தார்.

சந்தர்ப்பம் எப்பொழுதும் பாடங்களை மட்டுமே கற்றுத் தருவதில்லை. சில நேரங்களில் ஆசைகளையும் அதிகப்படியாக எதிர்பார்க்கவும் கற்றுத் தருகிறது. அடுத்த மூன்று நாள் கடலிலும் அவர்களுக்கு மோதிரத்தை திருப்பும் அளவிற்கு பணம் கிடைத்தது. மோதிரத்தை திருப்பி கொடுத்ததும் அந்தோணிக்கு சாதித்த உணர்வு கிடைத்தது.

இந்த சில நாட்களில் அந்தோணியின் குடும்பத்தில் சந்தோசமும் நிம்மதியும் திரும்பியிருந்தது. இலங்கை கடற்படையினரைப் பற்றிய பயமும் படகிற்கு ஏற்படும் செலவைப் பற்றியும் நினைக்காமல் அவர்கள் காலம் தள்ளிய அதிகப்படியான நாட்களாக அவை இருந்தன.

அன்று விடுமுறை நாள் என்பதால், சூசை படகிற்குச் சென்று படகைப் பார்த்துவிட்டு வருவதற்காக சென்றான். அவன் எப்பொழுதும் வரும் நேரத்திற்கே வந்திருந்தாலும் படகு வர வேண்டிய நேரத்தில் வராமலிருந்தது. அவனுடைய மனது பலவாறாக கற்பனை செய்துகொண்டிருந்தது. இலங்கை கடற்படையினரால் படகு பிடிக்கப்பட்டிருக்குமோ என்று பயந்து கொண்டிருந்தான்.

நீண்டநேரம் காத்துக் கொண்டிருந்தபின், அவனுடைய படகு வருவதைக் காணமுடிந்தது. படகு அருகில் நெருங்கி வரும்போதுதான் படகில் நான்குபேருக்கும் அதிகமாகத் தென்பட்டார்கள். மொத்தம் எட்டு பேர். விசைப் படகுக்குள் ஏறிய சூசை அங்கிருந்தவர்களிடம் என்ன நடந்தது என்று விசாரித்தான்.

"வல இழுத்துகிட்டு வர்றப்ப ஸ்லோன் நேவி வந்துட்டாய்ங்க. வலய அறுத்து தண்ணில விட்டுட்டு, போட்டுல சுட ஆரம்பிச்சுட்டாய்ங்க. லாஞ்சி தண்ணில தாந்து போர நேரம்பாத்து, நம்ம போயி அந்த போட்டுல இருந்த ஆளுகள நம்ம லாஞ்சில ஏத்திக்கிட்டு வந்துட்டோம்."

அப்பொழுதுதான் கவனித்தான். அங்கே வந்திருந்த நால்வரில் மலர்விழியின் தந்தையும் ஒருவர். அவரைப் பார்த்ததும், எல்லா வேலைகளும் தனக்கு தெரியும் என்பதைப் போல படகு வேலைகளை செய்து கொண்டிருந்தான். நாராயணன் இருந்த மனநிலையில் அதைக் கவனிக்கவில்லை. படகில் இருந்த அனைவரும் சோகமே உருவாக அமர்ந்திருந்தனர்.

அந்தோணியின் படகில் அன்று சொல்லிக் கொள்ளும்படி வருமானமில்லை. இலங்கை கடற்படையின் கெடுபிடி அதிகமாக இருந்ததால் அன்றைய இரவு முழுவதும் ஒரு இடத்தில் நிற்காமல் ஓடிக்

கொண்டே இருக்க வேண்டியிருந்தது. வீட்டுக்கு வந்து தான் கேள்விப்பட்டதை அந்தோணியிடம் கூறினான் சூசை.

"யாரோட லாஞ்சிடா அது?".

"யாரு லாஞ்சினு தெரியல. நாராயணனும் முருகேசனும் போற லாஞ்சி அது".

"அது காசியுட்டு லாஞ்சில. அதுல தான நாராயணனும் முருகேசனும் போனாய்ங்க. அந்த காசி போன வருசந்தான லாஞ்சி வாங்குனான். அதுக்குள்ள போச்சா? எத நம்பிதான் பொழப்ப ஓட்டுறதோ தெரியல"

இலங்கைக் கடற்படை சில நேரங்களில் பிடித்துக் கொண்டும் செல்லும், சில நேரங்களில் சேதாரங்களை உண்டு பண்ணிவிட்டும் செல்லும். பிடித்துக் கொண்டு செல்லும் போது நிகழ்வதை விட சேதாரத்தை உண்டு பண்ணும் பொழுது அளவுக்கு அதிகமான நஷ்டமே உண்டாகிறது.

வீட்டிற்கு வந்திருந்த நாராயணன் இன்னும் பயத்திலிருந்து மீளாமலேயே அமர்ந்திருந்தார். நாராயணன் வருவதற்குள் செய்தி சத்யாவிற்கும் மலர்விழிக்கும் எட்டியிருந்தது. மலர்விழிக்கு முதன்முதலாக தனது தந்தையைப் பார்க்க பரிதாபமாக இருந்தது.

செய்தியைக் கேள்விப்பட்ட சத்யாவின் தந்தை நாராயணனைப் பார்க்க வந்தார். அதை வீட்டிற்குள் இருந்து கவனித்த சத்யா, "அய்யையோ, இந்த மனுசனுக்கு என் அப்பாவ கண்டாலே ஆகாதே. இப்ப எதுக்கு என் அப்பா வந்தாரு. மலரு போயி ஒன் அப்பா பக்கத்துல நின்னுக்க. என் அப்பாவ ஏதும் சொல்லிடாம பாத்துக்கடி"

சத்யாவின் அப்பா வந்ததும் நாராயணன் வீட்டை விட்டுக் கிளம்பி போய் விட்டார். சத்யாவின் அப்பா வந்து வீட்டுத் திண்ணையில் அமர்ந்து, "ஏம்மா, ஒம் புருசனுக்கு நான் என்னம்மா பண்ணேன்? என்னப் பாத்தாலே மூஞ்சியத் திருப்பிக்கிட்டு போறாரு"

"அவர விடுங்கப்பா. இந்தக் காப்பிய குடிங்க"

"ஒம் புருசன் காசு கேட்டப்ப என்னால குடுக்க முடியல. அப்பதானமா ஆபரேசன் பண்ணிக் கெடந்தேன். அதுக்கு இன்னமா கோவமா திரிவாரு"

"இன்னக்கி ஸ்லோன் நேவிக்காரைங்க லாஞ்சிய தாத்துப் போட்டுட்டு போய்ட்டாய்ங்களாம். அதான் ஒரு மாதிரி திரியுறாரு"

"கடக்கரையில பேசிக்கிட்டாய்ங்கமா. அதான் என்ன ஏதுனு பாத்துட்டுப் போலாம்னு வந்தேன். ஒம் புருசன் இப்டி கௌம்பிப் போறாரு. வர்றப்ப ஒந்தம்பி காசக் குடுத்துட்டு வரச் சொன்னான்.

இந்தாம்மா"

கொடுத்த பணத்தை வாங்கிக் கொண்ட சத்யா அவரை சாப்பிட்டு விட்டு போகச் சொல்லியும் அவர் வேண்டாமென்று கிளம்பிப் போய்விட்டார். அவர் சென்று கொஞ்ச நேரம் கழித்து நாராயணன் வீட்டுக்கு வந்தார்.

"அப்பா வந்து காசு தந்துட்டு போனாக. லாஞ்சில நடந்ததப் பத்தி விசாரிக்கலாம்னு வந்தாகளாம். நீங்க கெளம்பி போய்ட்டீகனு அவரும் கெளம்பிப் போய்ட்டாரு".

'ஆமாமா. அவரு காசு குடுத்துதான் நம்ம குடும்பம் நடத்தணுமாக்கும்!" கோபம் இருந்தாலும் மரியாதை குறைவாகப் பேசவில்லை என்பதில் திருப்தி அடைந்தவளாக, அதற்கு மேல் எதுவும் பேசாமல் அமைதியானாள் சத்யா. நாராயணன் அடுத்த நாள் யாருடைய படகில் கடலுக்கு செல்லலாம் என்ற யோசனையில் இருந்த படியே கண்ணயர்ந்தார்.

மீன்களின் கண்ணைக் கட்டி வலை போட்டு பிடிப்பது போல, அவர்களின் கண்ணைக் கட்டி விதி ஒரு வலை பின்னி வைத்திருந்தது. அவர்கள் அதிலிருந்து வெளியே வர முயற்சி செய்தாலும் அவர்களை விட பெரிய சக்தி ஒன்று அவர்களை அதில் அழுத்திக் கொண்டே இருந்தது.

## -அத்தியாயம் : 14-

அன்று சூசை பள்ளியிலிருக்கும் பொழுது அவர்கள் படகில் வேலைக்குச் செல்லும் சார்லசு வந்து சூசையை அவசரமாக அழைத்துக் கொண்டு சென்றார். போகும் வழியில் என்ன விசாரித்தும் எந்தவொரு விஷயமும் சொல்லாமல் கூட்டிக் கொண்டு சென்றார். சூசையால் ஏதோவொரு பெரிய காரியம் நடந்திருக்கிறது என்பதை உணர முடிந்தது. ஆனாலும் என்ன நடந்திருக்கும் என்று யூகிக்க முடியவில்லை.

ஓட்டமும் நடையுமாக அவன் வீட்டை அடைந்த பொழுது வீட்டில் அளவுக்கு அதிகமான கூட்டம் இருந்தது. அவன் வீட்டு வாசலை அடைந்த பொழுது ஒருவர் சூசையின் தோளைத் தட்டிக் கொடுத்தார். உள்ளே நுழைந்ததும், அங்கே கட்டிலில் அந்தோணி கிடத்தப் பட்டிருந்தார். அவனுக்கு சர்வமும் அடங்குவது போல் இருந்தது.

அந்தோணியின் தலைமாட்டில் ஜோதி அமர்ந்து அழுது கொண்டிருந்தாள். கற்பனையிலும் நினைத்துப் பார்க்காத காட்சி ஒன்று நிகழ்ந்து கொண்டிருந்தது. அவனுக்கு அழுகை கூட சிறிது நேரம் கழித்தே வெளிப்பட்டது. அந்தோணியின் உடலுக்கு அருகே சென்றவன் அவர் மேல் கை வைத்தான். இதற்கு முன் அவன் அந்தோணியைத் தொட்டதை நினைத்துப் பார்த்தான். எத்தனை வருடங்கள் இருக்கும் அப்பாவைத் தொட்டுப்பேசி...

ஜோதியின் அழுகைக்கு ஊடாக மற்ற பெண்களும் ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்தார்கள். ஜோதி கால் நீட்டி உட்கார்ந்து தலை விரி கோலமாய் அழுது கொண்டிருந்தாள். அடிக்கடி தலையில் அடித்துக் கொண்டும் மூக்கை சிந்திக் கொண்டும் மிகுந்த சத்தத்தில் ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்தாள். அப்பாவுக்கு என்ன நடந்தது என்று தெரிந்து கொள்ளாமல் தலையே வெடித்துவிடும்போல இருந்தது சூசைக்கு. வீட்டைவிட்டு வெளியே எழுந்து நடந்து வந்தான். சூசையின் சித்தப்பா ஒரு ஓரத்தில் நின்று கொண்டு துண்டை வாயில் வைத்து அழுது கொண்டிருந்தார்.

"எப்புடி சித்தப்பா நடந்துச்சு?"

"காலைல உங்கம்மா வந்து அவரு மயங்கி விழுந்துட்டாருனு சொன்னாக. நானும் வேகமா வந்து பார்த்துட்டு, ஆஸ்பத்திரிக்கு தூக்கிட்டு ஓடுனோம். போற வழிலயே உங்கப்பா சீவன் பிரிஞ்சுருச்சு"

நடந்து கொண்டிருப்பது ஒரு வேலை கனவாக இருக்குமோ என்று சூசை நினைத்துப் பார்த்தான். மீண்டும் திரும்பவந்து கட்டில் அருகிலேயே

அமர்ந்து கொண்டான். வறுமையும் கடனும், இயலாமையும், இலங்கைக் கடற்படையுமாகச் சேர்ந்து இவர்களின் வாழ்க்கையின் துயரங்கள் அத்தனையிலும் பங்குபிரித்துக் கொள்ளும் உரிமையைக் கொண்டிருந்தன. அத்தனையுமாய் சேர்ந்து அந்தோணியின் முழு வாழ்க்கைக்குமான ஓர் உறவை ஒரேயடியாய் பறித்து விட்டது,

காரியங்களை முன்நின்று பார்த்துக் கொண்டிருந்தார், டேவிட். கூட்டத்திலிருந்த ஒருவர், "ரெம்ப நேரம் ஆச்சுப்பா. குளிப்பாட்ட வேணாமா! பொம்பளங்கள அமத்திட்டு பாடிய எடுத்துட்டு வாங்கப்பா"

உள்ளே இருந்த பெண்களின் ஒப்பாரியை அடக்குவது மிகப் பெரிய வேலையாக இருந்தது. அந்தோணியின் உடலைக் குளிப்பாட்ட தூக்கும் பொழுது ஜோதி அந்தோணியின் உடலைப் பிடித்துக் கொண்டு கதறி அழுதாள். கூட இருக்கும் பெண்கள் ஜோதியை பலவந்தமாக இழுக்க வேண்டியதாயிற்று. அந்தோணியின் உடலை குளிப்பாட்டி சீயக்காயும் எண்ணெயும் வைக்கும் பொழுது சூசையிடம் கண்ணீர் கூட வற்றிப் போயிருந்தது. எல்லோரும் சீயக்காயும் எண்ணையும் வைத்து முடித்ததும் அந்தோணியின் உடலை புது உடையால் போர்த்தி பெட்டியில் கிடத்தினர்.

பெண்களை வீட்டிலேயே விட்டுவிட்டு ஆண்கள் மட்டுமே சென்றனர். அந்தோணியின் உடலைக் கல்லறைக்கு எடுத்துச் சென்றார்கள். அடக்கம் செய்துவிட்டு வீட்டுக்கு வரும்பொழுது, வீட்டில் ஏதோ ஒன்று குறைவது போல் இருந்தது சூசைக்கு. ஆனாலும், வீடு அன்று அதிகப்படியான ஆட்களாலே நிறைந்திருந்தது. யார் இருந்தென்ன அப்பாவை இழந்த துயரத்தை எப்படி ஈடு கட்டுவது. ஜோதியின் அழுகை இன்னும் முடிந்த பாடில்லை.

மறுநாளைய காரியங்களை டேவிட் முன்நின்று கவனித்துக் கொண்டிருந்தார். நேற்றுவரை மற்றவர்களைத் தேற்றிக் கொண்டிருந்த டேவிட், மூன்றாம் நாளில் யாருக்கும் தெரியாத வண்ணம் மறைவாக உட்கார்ந்து, மனம்விட்டு அழுது கொண்டிருந்தார். அந்த மூன்று நாட்களிலும் யாராவது ஒருவரின் கண்ணீரை அந்த நிலம் குடித்துக் கொண்டே இருந்தது. ஜோதியின் அப்பாவால் கூட அழுகையை சில நேரங்களில் கட்டுப்படுத்த முடியவில்லை. துண்டை வாயில் வைத்து கண்ணீரை மட்டுப்படுத்தினார்.

மூன்றாம் நாள் விஷேசம் முடிந்து ஆட்களெல்லாம் கிளம்பின பிறகு, வெறிச்சோடிப் போயிருந்தது. சூசை வீட்டில் திண்ணையில் அமர்ந்திருந்தான். உள்ளே அவன் அம்மா படுத்துக் கொண்டிருந்தாள். கொஞ்ச நேரம் அமைதியாக இருந்தாலும், அடுத்த நொடியே

எதையாவது நினைத்துக்கொண்டு அழுகையை ஆரம்பித்தாள். அவளால் எதையும் மறக்க முடியவில்லை. எதிர்காலமே இருண்டு விட்டதுபோல் இருந்தது. இனிமேல் என்ன செய்யப் போகிறோம் என்பதை நினைத்துப் பார்த்தும் நடந்ததை நினைத்தும் அழுது கொண்டே இருந்தாள்.

ஜோதியின் அப்பா மணலில் அமர்ந்திருந்தவர், "டே சூச. வருத்தப்படாதடா. இனிமே பின்னால போயி போன உசுர எடுத்துட்டு வரப் போறமா என்ன?" அமைதியாக இருந்த வீட்டில் ஏதாவது ஒன்றைப் பேச வேண்டும் என்பதற்காகவே அவர் பேச்சை ஆரம்பித்தார். ஆனாலும் அங்கே யாரும் பேசும் மனநிலையில் இல்லை. அடுப்படியில் சூசையின் சித்தி மேரி நிற்பதைப் பார்த்தவர், "அம்மாடி. காப்பி போட்டுட்டு வந்து குடும்மா. இப்புடியே இருந்தா என்ன ஆகுறது?"

மேரி காப்பியோடு வந்து சூசையின் தாத்தாவிடம் அருகில் ஒரு குவளையை வைத்துவிட்டு, இன்னொரு குவளையை சூசையிடம் கொடுத்தாள். திரும்ப உள்ளே சென்று ஜோதியையும் எழுப்பினாள். தேநீரைக் கொடுத்துக் கொண்டிருந்தாள். சிறிது நேரம் அமைதியாக இருந்த சூசை காப்பியை அருந்தினான்.

"ஏம்மா மேரி, ஒன் வீட்டுக்காரரு எங்கம்மா? பாவம், அண்ண எறந்ததுல ரெம்ப ஒடஞ்சு போயிட்டாரு".

"பெட்டி செஞ்சவங்களுக்கும் தோரணங் கட்னவங்களுக்கும் காசு குடுக்க போயிருக்காரு சித்தப்பா".

அங்கே நிலவியிருந்த அமைதியைக் குலைக்கவே அவர்கள் பேச முயற்சி செய்தனர். ஆனாலும் அவர்களின் ஒவ்வொரு முயற்சியையும் தோற்கடித்து அமைதியும் வெறுமையுமே அவர்களை வென்றது. என்ன பேசுவது என்று தெரியாமல் திரும்ப திரும்ப சோகத்திலும் அமைதியிலும் மூழ்கிக் கொண்டிருந்தனர்.

## -அத்தியாயம் : 15-

அந்தோணி இறந்து ஐந்து நாட்கள் கழித்து சூசை பள்ளிக்குச் சென்றான். பள்ளியில் அனைவரின் பார்வையிலும் சூசை மேல் ஒரு பரிதாபமே இருந்தது. அந்தப் பார்வைக்கு அவனால் எப்படி திரும்பிப் பார்க்க வேண்டும் என்றோ எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்றோ தெரியவில்லை. அந்தப் பரிதாபமான பார்வையிலிருந்து தப்பிக்க தனது பார்வையை வேறு பக்கமே திருப்ப வேண்டியிருந்தது.

அன்று ஆசிரியர்கள் கூட சூசையிடம் எந்தவொரு கேள்வியும் கேட்டு கஷ்டப்படுத்தி விடக்கூடாது என்பதில் மிகுந்த கவனத்துடன் இருந்தனர். மலர்விழி சூசையிடம் பேசும் தருணத்திற்காக காத்துக் கொண்டிருந்தாள். சூசையும் கூட மலர்விழி தன்னுடன் பேச வருவாள் என்று நினைத்துக் கொண்டிருந்தான். மதிய உணவு இடைவேளையின் போது அதிகமான பேர் சாப்பிட வெளியே சென்றதும், மிக குறைவானவர்களே வகுப்பில் இருந்தனர். மலர்விழி எழுந்து சூசையின் இடத்திற்கு வந்தாள்.

"சூச'

"சொல்லு மலரு"

"வீட்ல எல்லாரும் எப்படி இருக்காங்க?"

"ம்ம்ம்.. இருக்காங்க. அம்மாதான் அடிக்கடி அழுது. அதுவும் சித்தி இருந்து பாத்துக்கறாக".

"சரி சூச, நீயும் எதுக்கும் வருத்தப்படாத"

மலர் பேசுவதைக் கேட்டு சூசை தலையாட்டிக் கொண்டான். மலர்விழி ரொம்பப் பெரிய மனுஷித் தனத்தோடு பேசுவதாக அவனுக்குப் பட்டது. ஆனாலும், சூசை அதை விரும்பினான். இன்னும் கொஞ்சநேரம் அவள் இப்படியே பக்கத்திலிருந்து பேசிக்கொண்டிருந்தால் நன்றாக இருக்குமே என்றுகூட நினைத்தான். மேலே என்ன பேசுவது என்று தெரியாததால், இரண்டுபேருமே மௌனத்தை அலையவிட்டு அவரவர்க்குள் அமைதிகாத்தார்கள். வேறெதுவும் சொல்லாமல் மலர் தனது இடத்தில் போய் உட்கார்ந்துகொண்டாள்.

அன்று மாலை பள்ளி முடிந்து சூசை வீடு வரும்பொழுது அவனது சித்தப்பாவும் சித்தியும் அவர்கள் வீட்டிற்குச் சென்றிருந்தார்கள். அவனது தாத்தா மட்டும் திண்ணையில் படுத்திருந்தார். சூசை வந்ததும் எழுந்து, "வாடா சூச. நீ வந்தோடன ஒன்ன வீட்டுக்கு வர சொன்னாரு ஒன் சித்தப்பா".

பையை வீட்டுக்குள் வைத்து விட்டு சித்தப்பா வீட்டுக்குச் சென்று, சித்தி

கொடுத்த காய்கறிகளை வாங்கிக் கொண்டு வீட்டுக்குத் திரும்ப வந்தான். ஜோதியும் எழுந்து வீட்டு வேலைகளைக் கொஞ்சம் கொஞ்சமாக பார்க்க ஆரம்பித்தாள். ஆனாலும், முன்பிருந்த வேகம் அவளிடம் இல்லை. அவளுடைய ஒவ்வொரு செயலிலும் ஏதோ ஒரு சோகம் வெளிப்பட்டுக் கொண்டே இருந்தது. அன்று இரவு உணவு முடிந்ததும் சூசையும் ஜோதியும் வீட்டிற்குள் படுத்துக் கொண்டனர்.

அந்தோணி கடலுக்கு போகும்போதெல்லாம் இரண்டுபேர் மட்டும்தான் வீட்டில் தனித்திருப்பார்கள். விடிந்தால் அப்பா திரும்வ வந்துவிடுவார் என்கிற நம்பிக்கை அவனிடம் இருக்கும். இதுவும் அப்படி ஓர் இரவாக இருக்கக் கூடாதா என்று அவன் மனம் ஏங்கிக் கொண்டிருந்தது.

அமைதியாக தூங்குவதற்கு முன் எடுத்துக் கொள்ளும் நேரமே பலவற்றை வேகமாக சிந்திக்க தூண்டுகிறது. அந்த நேரம் ஜோதிக்கு போதுமானதாக இருந்தது. தலைமாட்டில் இருந்து பார்த்துக் கொண்டிருக்கும் அந்தோணியை நினைத்து கண்ணீர் சிந்த ஆரம்பித்தாள். கொஞ்ச நேரம் அமைதியாக இருந்த சூசையும் சிறிது நேரங்கழித்து அழ ஆரம்பித்தான்.அடுத்த நாள் காலை எழுந்த ஜோதியிடம் நேற்றிருந்த வேகமே இருந்தது. எந்தவொரு வேலையையும் வேகமாக பார்க்க முடியவில்லை. அந்தோணியின் இறப்பு ஜோதியை முதுமைப் பருவத்திற்கு கொண்டு சென்றது. சூசை எந்தப் பருவத்தில் தான் இருக்கிறோம் என்றே தெரியாத பருவத்தில் இருந்தான்.

அந்தோணி உயிருடன் இருந்த பொழுதே சூசை படகிற்கு சென்று வந்ததால், அவனுக்கு புதிதாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற தேவையில்லாமல் இருந்தது. சம்பளம் கொடுப்பதை மட்டும் அவனது தாத்தா பார்த்துக் கொண்டார். அடிக்கடி டேவிட் வீட்டிற்கு வந்து விசாரித்துச் சென்றார். ஏதோ ஒரு வகையில் அந்தக் குடும்பம் போய்க் கொண்டிருந்தது. அந்தோணி இறந்து ஒரு மாதம் கழித்து ராசா வீட்டிற்கு வந்தார். ராசா வரும்பொழுது தாத்தா திண்ணையில் அமர்ந்திருந்தார்.

"வாப்பா ராசா. எப்புடி இருக்க?"

"நல்லா இருக்கேன். நீங்க எப்புடி இருக்கீக? தங்கச்சி எப்புடி இருக்கு?"

"எல்லாரும் இருக்கம்ப்பா.. வேற என்னத்த சொல்றது? சோதி ராசாக்கு காப்பி போட்டுக் குடுமா"

"இருக்கட்டும். தங்கச்சிய எதுக்கு கஸ்டப்படுத்தனும்?"

கொஞ்ச நேரம் பொதுவாக பேசிக் கொண்டிருந்து விட்டு, "சொல்லு ராசா. ஏதும் முக்கியமான வெசயஞ்சொல்ல வந்தியாப்பா?"

"வீடு கஸ்டத்துல இருக்கது எனக்கு நல்லாவே தெரியுது. அந்தோணி இல்லாம ஒங்கள கஸ்டப்படுத்துறது எனக்கும் மனசு கஸ்டமாதான் இருக்கு".

"பரவால்ல. சொல்ல வந்தத சொல்லுப்பா. எங்களால என்ன முடியுதுனு பாப்போம்".

"அந்தோணி லாஞ்சி வாங்குறப்ப நாலு லச்சம் வாங்குனாப்ல. ஆனா ரெண்டு வருசமா எம்பதாயிரந்தான் கட்டிருக்காப்ல. வட்டியோட சேத்து அஞ்சு லச்சத்துக்கு மேல வருது".

"வரும்லப்பா, வரத்தான செய்யும். இந்த சமயத்துல இந்த வீடே ரெம்ப கஸ்டத்துல இருக்கேப்பா. அவ்வளோ காசு எப்புடி பெரட்டித் தாரது?"

"தெரியுதுங்க. அதுனால, நாலு லச்சமாவே வச்சு இனிமேயாச்சும் மாசாமாசம் காசு குடுத்தீங்கன்னா, வட்டியுங்கூடாதுல. தர வேண்டிய மத்த காச கழிச்சுக்குருவோம்"

"சரிப்பா. சோதிட்டயும், அது கொழுந்தன்ட்டயும் கேட்டுட்டு சொல்றேன். நீயும் ஒரு மூணு லச்சமா கொறச்சா நல்லா இருக்கும்பா".

"ஒங்களுக்கே தெரியாதா? அஞ்சரை லச்சத்துக்கிட்ட வருது. அப்புடி இருந்தும், நாலு லச்சந்தான் சொல்றேன்."

சிறிது நேரம் கழித்து ராசா கிளம்பியதும் சூசையின் தாத்தா, ஜோதியைக் கூப்பிட்டு உட்காரச் சொன்னார். ஜோதி தந்தையின் முன்னால் மணலில் அமர்ந்தாள்.

"என்னம்மா, ராசா இப்புடி சொல்லிட்டு போறான்? ரெண்டு வருசமா எம்பதாயிரந்தான் குடுத்தீங்களா?"

"ஆமாப்பா. அதுக்கு மேல குடுக்க முடியல. லாஞ்சு வாங்குனதுலருந்து வேல வச்சிட்டே இருந்துச்சு. வருசத்துக்கு ஒன்ற மாசம் ஸ்ட்ரைக் வேற. எப்புடி குடுக்குறது?"

"இப்ப நாலு லச்சத்துலருந்து கணக்கு வச்சுகறன்னு சொல்றானே. வட்டி மட்டுமே மாசம் பத்தாயிரத்த தாண்டுமே. எப்புடிமா குடுக்க போறோம்?"

"பாப்போம்பா. அந்த முனியய்யா என்ன வழி விடுறாருனு?"

## -அத்தியாயம் : 16-

வீட்டில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று கொஞ்சம் கொஞ்சமாக தெரிந்து கொண்டான் சூசை. அவனையும் அறியாமல் குடும்பக் கஷ்டங்களில் மூழ்கிக் கொண்டிருந்தான். முன்பெல்லாம் விடுமுறை நாட்களில் மட்டுமே படகிற்கு சென்று கொண்டிருந்தவன் இப்பொழுது எல்லா நாட்களிலும் படகிற்கு சென்று வந்து கொண்டிருந்தான். படகிலிருந்து நிறுவை முடித்ததும் பள்ளிக்குச் செல்கின்றான். தாத்தாவும் ஒவ்வொரு முறை சம்பளம் கொடுத்து முடித்ததும் அதை சூசையிடம் கூறிக் கொண்டிருந்தார். தனக்கு அது சம்பந்தமில்லை என்று அவன் நினைத்தாலும் ஒவ்வொரு முறை தாத்தா சொல்லும்பொழுதும் அமைதியாக கேட்டுக் கொண்டிருந்தான்.

அரையாண்டுத் தேர்வு விடுமுறை நாட்களில் சூசை சாயங்கால நேரம் மட்டுமே நண்பர்களைப் பார்க்கச் சென்றான். காலை நேரங்களில் தொழிலுக்கு கிளம்பும் படகை அனுப்புவதற்கும் அடுத்தநாள் காலை திரும்பி வரும் படகில் வேலை செய்வதற்கும் சென்று கொண்டிருந்தான். கொஞ்சம் கொஞ்சமாக படகைப் பற்றி அறிந்து கொண்டிருந்தான்.

அன்று மாலை மலர்விழியைப் பார்க்க வேண்டுமென்றே அவன் மலர்விழி வீட்டு வழியே சென்றான். வீட்டிற்கு வெளியே மலர் தென்படவில்லை. எப்படியாவது வெளியே வரும்பொழுது பார்த்து விட வேண்டும் என்று அவள் வீட்டிற்கு எதிரே மெதுவாக நடந்தான். ஆனாலும் மலர்விழி வீட்டிற்கு வெளியே வரவில்லை. கொஞ்சம் ஏமாற்றமாகவே அந்த வீட்டைத் தாண்டிச் சென்றான். இப்பொழுதெல்லாம் பள்ளியில் அடிக்கடி மலர்விழியிடம் பேசுகிறான். ஆரம்பத்தில் இருந்த படபடப்பு குறைந்தாலும், அவளிடம் பேசிய பின் மனதில் ஏற்படும் மகிழ்ச்சி அதிகமாகி இருக்கிறது.

சூசை மலர்விழியின் வீட்டைத் தாண்டிப் போய்க் கொண்டிருக்கும் பொழுது, மலர்விழி வீட்டில் கீரை நறுக்கிக் கொண்டிருந்தாள். அவள் அம்மாவும் கூடே அமர்ந்திருப்பதைக் கண்டதும் சத்தங் காட்டாமல் வந்த வழியிலே திரும்பி நடக்கலானான்.

“ஏன்டி, ஒங்கூட படிச்ச ராணி இப்ப ராம்நாட்ல ஆஸ்டல்ல தங்கிப் படிக்கிறாளாம்ல. அவ அப்பாவ ஸ்லோன் நேவி புடிச்சுட்டுப் போயி ரெண்டு வாரத்துக்கு மேல விடலயாமடி” மகளிடம் பேச்சுக் கொடுத்தபடியிருந்தாள் சத்யா.

"ஆமாம்மா. அப்புடிதான் சொன்னாக. பாவம், அவ அப்பாவும் அவள எப்புடியாச்சும் நல்லாப் படிக்க வச்சர்லாம்னு பாக்குறாரு. அவளும்

நல்லாதான் படிப்பா. ஆனா அவ குடும்பந்தான் ரெம்ப கஸ்டத்துல இருக்கு"

அவரவர் குடும்பத்திற்கு வருத்தப்பட்டு சலித்துப் போய் அடுத்தவர்களின் கஷ்டத்தை நினைத்து வருத்தப்பட ஆரம்பித்து விட்டனர். அடுப்பில் இருந்த சோறு பொங்குவதை பதம் பார்த்து அதை வடித்து விட்டு திரும்பவும் வந்து காய்கறி வெட்ட அவள் அம்மாவுடன் அமர்ந்தாள், மலர்விழி. அன்று இரவு மலர்விழியும் சத்யாவும் படுத்து உறங்க தயாராகும் பொழுது, சத்யாவின் அப்பா அவர்களை அழைப்பது கேட்டது. இந்த நேரத்தில் வருவதைப் பார்த்து பதறித் துடித்த சத்யா, "என்னப்பா, இந்த நேரத்துல வந்துருக்கிக".

"அத ஏம்மா கேக்குற? எல்லாம் ஒந்தம்பிதான். வீட்ல மண்ணெண்ண தீந்து போச்சு. இருக்குறத சாப்ட்டுட்டு எல்லாருந் தூங்கலாம்னு பாத்தா ஒந்தம்பிதான் சாப்புடாம தூங்க மாட்டானே. சமச்சு தந்தாலே தாங்கன்னு ஒத்த கால்ல நிக்குறான். அதான் கொஞ்சம் மண்ணெண்ண இருந்தா குடும்மா. மண்ணெண்ண அடுப்ப பத்த வச்சு ஏதாச்சும் சமைச்சு குடுக்குறோம்".

"நான் என்னாச்சோ ஏதாச்சோனு பதறிப்போயிட்டேன். இருங்க. சோத்துக்கு தண்ணி ஊத்திட்டேன். கஞ்சியா தர்றேன். அதக் கொண்டு போயிக் குடுங்க"

வாங்கிக் கொண்டு சத்யாவின் தந்தை சென்றதும், சத்யா சிரித்துக் கொண்டே, "பாத்தியா, ஒன் மாமன் பண்ணுற வேலய. சின்னப் புள்ளைலேர்ந்து அவன் அப்புடிதான் பண்ணுறான். நாங்க சின்ன புள்ளயா இருக்கப்ப நாங்க சாப்புடுறப்ப சாப்புடமாட்டான். எல்லாரும் சாப்புட்டு சாப்பாடு முடிஞ்சுருச்சுனு தெரிஞ்சொடன கத்த ஆரம்பிச்சுருவான். அவம்போடுற சத்தத்துல எப்புடி தூங்குறது? அப்பா அடிச்சா கூடக் கொஞ்சங் கத்துவான். வேற என்ன பண்றதுனு அம்மா பத்து பண்ணெண்டு மணிக்கு வெறகு வச்சு சமச்சு குடுப்பாங்க. இப்புடிலாம் சுட்டி பண்ணவந்தான் ஒன் மாமன்"

அந்த நிகழ்ச்சி அடிக்கடி நடப்பதுதான். அன்றும் அது போலவே நடந்தது. படகில் கூலி வேலைக்குச் செல்லும் நால்வரில் மூவர் மட்டுமே வந்திருந்தனர். என்ன செய்வதென்றே தெரியாமல் அவர்கள் யோசித்துக் கொண்டிருந்தார்கள். கடைசியில் சூசையின் தாத்தா, "இன்னைக்கி லாஞ்சிய கட்டுல போட்ரலாம்பா".

"நீங்க வேற. இப்புடியே லாஞ்சிய அடிக்கடி கட்டுல போட்டா வௌங்குமா?"

"வேற என்னப்பா பண்றது? ஆளுக இல்லைனா எப்புடி லாஞ்சிய ஓட்டுவிய"

"நாங்க மூணு பேரு இருக்கோம்ல. நாங்க பாத்துக்குறோம்"

"லாஞ்சி வேலைனா மூனு பேரு என்ன? ரெண்டு பேரு கூட போதும். ஆனா கடல்ல ஏதாவது ஒன்னு ஆச்சுன்னா, என்ன பண்ணுவிய? தொணக்கி கூட ரெண்டு பேரு வேணும்ல"

"ஒத்தாசைக்கி தான. சூசயக் கூட்டிக்கிட்டு போறோம். சூச சும்மா வரட்டும், மத்த வேலய நாங்க பாத்துக்குறோம்"

யாராவது இந்த மாதிரி கேட்பதும், சூசை கடலுக்கு போக வேண்டாமென்று தடுப்பதும் அடிக்கடி நடந்து கொண்டுதானிருந்தது. எனவே அவர்களின் குடும்பத்தாருக்கு இது ஒன்றும் பெரிதாக தெரியவில்லை. அதை மறுக்கலாம் என்று தாத்தா நினைக்கும் பொழுது, சூசை, "நா போறேன் தாத்தா. சும்மா ஒத்தாசைக்கு தான. நா பாத்துக்கறேன்"

"நீ எப்புடிடா போவ. கட வேலைலாம் சும்மா இல்ல. காலங்காலமா போறவனாலேயே சமாளிக்க முடில. நீ எப்புடி சமாளிப்ப?"

"சும்மா போறேன் தாத்தா. ஒரு நா போறேனே. இப்பல்லாம் நாந்தான லாஞ்சில வேல பாக்குறேன்".

"கட்டுல இருக்க லாஞ்சி வேற. பாடு இழுத்துட்டு போற லாஞ்சி வேற."

சூசை தான் போவதாக ஒரு பேச்சுக்குதான் கூறினான். ஆனாலும் அவன் தாத்தா இவ்வளவு கூறியதும் அவன் மனநிலை எதிராக மாறி எப்படியும் போய்விட வேண்டும் என்று தூண்டியது. அவனை எவ்வளவு சமாளித்தும் முடியாததால் கடைசியில், "இன்னக்கி ஒரு நா தான். மறுபடியும் போறன் கீரன்னு சொல்லப்புடாது"

அவனை கடலுக்கு அனுப்புவதில் ஜோதிக்கும் அவ்வளவு விருப்பம் இல்லை. இருந்தாலும் சூசையின் பிடிவாதத்தில் விட்டு விட்டனர். அரையாண்டு விடுமுறையில் ஒரு நாள் மட்டுமே மிச்சம் இருப்பதால் அதற்கடுத்து அவனால் போக முடியாது என்ற நம்பிக்கையில் ஜோதியும் அரை மனதாய் சம்மதித்து விட்டாள். சற்று நேரம் கழித்து வந்த டேவிட், அவன் கடலுக்குச் சென்றதை அறிந்து ஆழ்ந்த யோசனையோடு அமர்ந்துவிட்டார்.

## -அத்தியாயம் : 17-

ஏதோ ஒரு வேகத்தில் கடலுக்குப் போவதாய்ச் சொன்ன சூசை, படகிற்கு வந்ததும் அவசரப் பட்டு விட்டோமோ என்று நினைத்துக் கொண்டான். படகு நங்கூரத்தை எடுத்து விட்டு ஆழ்கடலை நோக்கி பயணித்ததும் அவனுக்கு இலங்கை கடற்படையும் அவர்களின் துப்பாக்கி தோட்டாக்களும் பயத்தை உண்டு பண்ணியது.

கொஞ்ச நேரம் சென்றதும் தன் பயத்தை அடக்க முடியாமல் அருகில் இருந்தவர்களிடம், "அண்ணே. ஸ்லோன் நேவிலாம் நம்மள எப்புடி பாப்பாய்ங்க?"

"அவய்ங்க ரோந்து வர்றப்ப நாம அவய்ங்க கண்ணுல மாட்டக் கூடாது. அவ்வளோதான்".

"ரோந்து வர்றது முன்னாலயே தெரியுமா என்ன?"

"செல நேரந் தெரியும். செல நேரந் தெரியாது. எல்லாம் நம்ம நேரத்த வச்சுதான் இருக்கு. நம்ம நேரம் நல்லாருந்தா ஒன்னுங்கவல இல்ல"

அவர்கள் பேச்சைக் கேட்டு அவனுக்கு இருந்த பயம் இன்னும் அதிகரித்தது. படகு ஆழத்தை நோக்கி செல்லச் செல்ல இவன் மேல் அடிக்கும் காற்று கொஞ்சம் கொஞ்சமாக பயத்தை அப்பிச் சென்றது. பயம் அதிகமாக அதிகமாக இவனுடைய இதயத்துடிப்பு படகின் சத்தத்தை விட அதிகமாக இவனுக்குக் கேட்டது.

இதுவரைக் கேள்விப்பட்ட இலங்கைக் கடற்படையை விட கேள்விப் படாத ஒன்று அவனைக் கொஞ்சம் கொஞ்சமாய் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. முதன்முதலாக கடலுக்குச் செல்பவர்களுக்கு ஏற்படும் தலை சுற்றலும் வாந்தியும்தான் அது. படகு கொஞ்சம் கொஞ்சமாக செல்லச் செல்ல இவனுக்கு தலை சுற்றல் அதிகமாகிக் கொண்டே போனது. படகு அலைகளுக்கு ஏற்ப அசைந்து ஆடும் பொழுது இவனுக்கு தலை சுற்றலை அதிகமாக்கியது. படகில் வீசும் ஒரு வித மீன் மற்றும் இறால் வாசம் அவனை ஏதோ செய்தது. மீன் மற்றும் இறால் வாசம் அவனுக்கு புதிது இல்லை என்றாலும், நடுக்கடலில் இந்த வாசம் அவனுக்கு ஒத்துக் கொள்ளவே இல்லை.

தனக்கு வாந்தி வரப் போகிறதென்று படகின் விளிம்பைப் பிடித்துக் கொண்டு நின்றான். கொஞ்ச நேரத்தில் வாந்தி எடுக்க ஆரம்பித்தான். மொத்தமாக வாந்தி எடுத்து வயிற்றில் ஒன்றும் இல்லை என்று தெரிந்தும் குமட்டிக் கொண்டு வந்தது. அடி வயிறு ஒரு மாதிரியாக வலித்தது. வயிற்றிற்குள் கயிறு கட்டி வாய் வழியே இழுப்பது போல்

தோன்றியது அவனுக்கு. தான் கடலுக்கு வருவதாக சொல்லியிருக்கக் கூடாது என்று மனதிற்குள் நினைத்துக் கொண்டான்.

கடலுக்கு வந்து இரண்டு மூன்று மணி நேரங்களே ஆகியிருந்தது. அடுத்த நாள் காலை வரை படகிலேயே இருக்க வேண்டும் என்பது அவனுக்கு மலைப்பாய் இருந்தது. அருகில் இருந்த ராஜு, "ஆரம்பத்துல இப்புடிதானப்பா இருக்கும். நீயாச்சும் பரவால்ல. நான்லாம் லாஞ்சிய வீட்டுக்கு திருப்புங்கடானு கத்திட்டேன்".

தனக்கும் அது போலவே கத்த வேண்டும் என்று தோன்றினாலும், முடிந்த அளவு சமாளித்துக் கொண்டான்.

"சூச. நீ போயி வீலசுக்குள்ள தூங்கு. மத்த வேலய நாங்க பாதுக்குறோம்."

அவன் படுத்த இடத்தில் கொஞ்சம் ஈரத்தன்மையை அவனால் உணர முடிந்தது. அவர்கள் அவனுக்கு போர்த்திக் கொள்ள ஒரு போர்வை கொடுத்தனர். சிறிது ஈரம் மற்றும் நீண்ட நாட்கள் துவைக்காத வாசம் கொண்ட போர்வை அது. இதுவே வீடு என்றால் அதை அவன் போர்த்திக் கொண்டிருக்க மாட்டான். கொஞ்ச நேரத்தில் அவன் தூங்கிப் போனான். ஆனாலும் அவனால் படகு அசைந்து கொண்டிருப்பதை ஆழ்ந்த உறக்கத்திலும் கூட உணர முடிந்தது.

அன்றைய பொழுது முழுவதும் அவன் உறங்குவதும் எழுந்து பார்ப்பதுமாக இருந்தான். தூக்கத்தில் கூட நேரம் வேகமாக போகவில்லை என்றே அவன் நினைத்தான். சாப்பிட அழைக்கும் பொழுதும் மிகக் குறைவாகவே சாப்பிட்டு விட்டு இடத்தில் போய் படுத்துக் கொண்டான். தான் வாழ்ந்த நாட்களிலேயே மிக நீளமான நாளாக அந்த நாளை உணர்ந்தான்.

ஒரு வழியாக படகு அடுத்த நாள் காலை கரைக்குத் திரும்பியது. எப்பொழுதும் பார்க்கும் வேலையைக் கூட பார்க்காமல் வேகமாக வீட்டிற்குச் சென்று தாத்தாவை படகிற்கு அனுப்பினான். வீட்டிற்கு வந்ததும் நேராகப் போய்த் தரையில் படுத்துக் கொண்டான்.

அவன் வந்ததும் படுத்ததைப் பார்த்த ஜோதி, 'என்னடா வந்தோடன படுத்துட்ட. ஸ்கூலுக்கு போகலையா?"

"இல்லம்மா, தல சுத்துது. வாந்தி வர்ற மாரி இருக்கு. செத்த நேரம் படுத்து கெடக்கேன்" என்றான். அவனால் அதற்கு மேல் பேச முடியவில்லை. உடனடியாகத் தூங்கிவிட வேண்டும் என்று கண்ணை மூடிக்கொண்டு படுத்தான். வீட்டில் படுத்திருக்கும் போதும் அவனுக்கு

படகு அலைகளில் அசைவது போலவே இருந்தது.

அரையாண்டுத் தேர்வு முடிந்து எல்லோரும் பள்ளிக்குத் திரும்பியிருந்தனர். ஆனால் சூசை மட்டும் கடலுக்குப் போய்விட்டு வந்தவன் பள்ளிக்கு வரவில்லை. மலர்விழி அவனை எதிர்பார்த்தாள். அவன் அவனுடைய இருக்கையில் இல்லை. நேற்று மதியம் சூசை வீட்டு வழியே கடைக்குச் செல்லும்போதுகூட அவனைக் காண முடியவில்லை. வீட்டுப்பக்கம் எப்பொழுதாவது வருவான். அப்படிக்கூட சில நாட்களாக அவனைக் காணவில்லை.

பள்ளியில் தேர்வுத் தாளைக் கொடுத்துக் கொண்டிருந்தனர். மலர்விழி குறைவான மதிப்பெண்களே எடுத்திருந்தாள். அவள் இப்பொழுதெல்லாம் மதிப்பெண் குறைவாக எடுப்பதற்காக அவ்வளவாக வருத்தப் படுவதில்லை. அவளுக்கு படிப்பின் மீது ஆர்வமோ வெறுப்போ இல்லாமல் இருந்தாள். காலையில் சற்று நேரம் சூசைக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்தவள், அவளாகவே இனிமேல் சூசை வர மாட்டான் என்று முடிவு எடுத்துக் கொண்டு அடிக்கடி திரும்பாமல் இருந்தாள். மாலை பள்ளி முடிந்ததும் அவள் சூசை வீட்டு வழியாகவே நடந்து வந்தாள். அப்பொழுதுதான் சூசை எழுந்து முகம் கழுவிக் கொண்டிருந்தான்.

அவனைப் பார்த்ததும் சூசை எப்படியும் தன்னைப் பார்க்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டு மெதுவாக நடந்தாள். அவளைப் பார்த்த சூசை, தான் சட்டையில்லாமல் நிற்பதை உணர்ந்து உடனே வீட்டிற்குள் சென்று சட்டை மாட்டிக் கொண்டு வெளியில் வந்தான். ஆமை வேகத்தில் நடந்தாலும் பத்தடியில் அவன் வீட்டைத் தாண்டி விடலாம். அவன் உள்ளே சென்று சட்டை அணிந்து வரும் நேரத்திற்குள் மலர்விழி மெதுவாக நடந்தே அவன் பார்வையிலிருந்து மறைந்து சென்றாள். சூசையைப் பார்த்ததில் அவளுக்கு ஏதோ ஒரு வகையில் சந்தோசமிருந்தது. சூசைக்கும் அவள் தன்னைப் பார்ப்பதற்காகவே மெதுவாக நடப்பது போல் தோன்றியது.

மாலையில் சூசைக்கு கொஞ்சம் தெளிவாகவே இருந்தது. தலைவலி கொஞ்சம் இருந்தாலும் காலையிலும் நேற்று படகிலும் இருந்த அளவு இல்லை. இரவு நன்றாக உறங்கினால் நாளை காலை சரியாகிவிடும் என்று நம்பினான். இனிமேல் என்ன ஆனாலும் கடலுக்குச் செல்லக் கூடாது என்று முடிவு செய்து கொண்டான். ஆனால் படகு அவனுடைய உறவை மிகவும் விரும்பியது. அவனுடைய உறவை அத்துடன் துண்டித்துக் கொள்ள விரும்பவில்லை. எனவே அடுத்த உறவுக்கு ஆசையோடு காத்துக் கொண்டிருந்தது.

அன்று இரவு, "டே சூச. பரவாயில்லடா. நெறயாவே சம்பாரிச்சுட்ட. என்னைக்கும் வாரத விட இன்னைக்கி தொழிலு நல்லாவே நடந்துருக்கு"

தாத்தா சொன்னதைக் கேட்ட சூசை அவர் நான்காவது ஆளுக்கு கொடுக்க வேண்டிய சம்பளம் மிஞ்சியதில் இவ்வளவு சந்தோசம் கொள்கிறாரா அல்லது உண்மையிலேயே தொழில் நன்றாக நடந்ததா என்று தெரியவில்லை. இருந்தாலும் சூசைக்கு கொஞ்சம் பெருமையாகவே இருந்தது.

அடுத்த நாள் காலை எழும்பொழுது சூசை தெளிவாகவே இருந்தான். தலைவலி முற்றிலும் குறைந்திருந்தது என்பதை விட மலர்விழி இன்று எப்படியும் தன்னுடன் பேசிவிடுவாள் என்று நினைத்தது அவனுக்கு புதுதெம்பைத் தந்தது. தான் பள்ளிக்கு வராத காரணத்தை எப்படியும் கேட்பாள் என்று நினைத்தான். வேகவேகமாக கிளம்பி அன்று கடையில் வைத்து மலர்விழியைப் பார்த்த நேரத்திற்கு கிளம்பினான். மனிதன் சந்தர்ப்பங்களில் ஏமாளியாகவே இருக்கிறான். மலர்விழியை அந்த நேரத்தில் அவனால் பார்க்க முடியவில்லை.

## -அத்தியாயம் : 18-

பள்ளிக்கு சீக்கிரமாகவே வந்து அமர்ந்திருந்தான். ஒவ்வொருவராக வர மலர்விழியை எதிர்பார்த்திருந்தான். மலர்விழி வரும்பொழுது அதிகமானவர்கள் இருந்ததால், சூசையால் மலர்விழியுடன் பேச முடியவில்லை. வகுப்பு ஆரம்பித்தவுடன் ஆசிரியர் பின்னால் இருக்கும் பையனைக் கேள்வி கேட்கும் பொழுது மலர்விழி அதைத் திரும்பிப் பார்க்கும் சாக்கில் இவனைப் பார்த்தாள். இடைவேளையின்போது பேசலாம் என்று நினைத்திருந்தான். ஆனால், இடைவேளையில் மலர்விழி எழுந்து வரவே இல்லை. சூசை அருகில் இருக்கும் மணி எழுந்து சென்றதும் சூசையிடம் பேசலாம் என்று நினைத்தாள். ஆனால், மணி அந்த இடத்தை விட்டு அகலவே இல்லை. எனவே சூசை தானே சென்று பேசுவது என்று முடிவு செய்து மலர்விழியின் இடத்திற்கு சென்றான்.

"மலரு. ஒன் ஃப்ரெண்டு ராணியோட அப்பா ஸ்லோன் நேவிட்ட மாட்டிட்டாரே. வந்துட்டாரா?'

"இன்னமு வரலனு நெனக்கிறேன். எப்ப வருவாருனு எந்த நியூசும் இல்ல. ராணிகூட ஆஸ்டல்லருந்து வீட்டுக்கு வந்துட்டா"

"ஆமா. என் அம்மா கூட நேத்து அதப் பத்திதான் பேசுனாக”

"சரி, நீ எதுக்கு நேத்து வரல? ஒடம்பு முடியலயா?"

"ஆமா. முந்தா நேத்து கடலுக்கு போனேன். ஒரே தலவலி. எந்திரிக்கவே முடியல. நேத்து சாயங்காலந்தான் எந்திரிச்சேன்"

"ம்ம்.. சூச... பெரிய ஆளாயிட்ட போல!! சம்பாரிச்சு இன்னொரு லாஞ்சி வாங்கப் போறியா?" என்று அவள் சிரித்துக் கொண்டே கேட்கும் பொழுது, வெளியே வந்து கொண்டிருக்கும் ஆசிரியர் தனது வகுப்புக்குதான் வருகிறார் என்று தெரிந்துகொண்டு தன்னுடைய இருக்கைக்கு வேகமாக ஓடினான்.

மலர்விழி சிரித்துக் கொண்டே கேட்டதை நினைத்து மனதுக்குள் சிரித்துக் கொண்டே இருந்தான். அந்த ஆசிரியர் பாடம் நடத்துவதைக் கேட்டுக் கொண்டிருந்தாலும் அவனுடைய மனநிலையில் அந்த வார்த்தைகள் கொஞ்சம் கூட இறங்காமல் காதில் பட்டு அந்த வார்த்தைகள் தெறித்து வெளியே விழுந்து கொண்டிருந்தன.

சூசை கடலுக்குச் சென்றதை நினைத்துப் பார்த்தபோது, அவன் எந்தவொரு வேலையும் செய்ததாக தெரியவில்லை. தலைவலி மட்டும் வராமல் இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். அவன் அதிகமான நேரங்களில் தூங்கிக் கொண்டிருந்தான். தூங்கியதைத் தவிர அவன்

எந்தவொரு வேலையும் செய்யவில்லை. அவன் இப்பொழுது நினைக்கும் பொழுது கடல் தொழில் மிக எளிதாகவே தெரிந்தது. தன்னால் எளிதாக கடல் தொழில் செய்ய முடியும் என்று நினைத்துக் கொண்டான். ஆனாலும் கடலில் இருக்கும் பொழுது அவன் நினைத்ததும் இப்பொழுது நினைப்பதும் நேரெதிராக இருந்தது. அங்கு வாழும் யாருக்குமே ஒரே மாதிரியான மனநிலை எப்பொழுதும் இருந்ததில்லை. சூசை அவனுக்கே தெரியாமல் அவர்களோடு ஐக்கியமாகிக் கொண்டிருந்தான்.

ஜோதியும் அந்தோணியை நினைத்து அடிக்கடி அழுவதில்லை. ஆனாலும் அவளுடைய ஒவ்வொரு வேலையிலும் அந்தோணியின் பிரிவு தெரிந்தது. அங்கே வாழும் பல மனிதர்களில் குடிப்பழக்கம் இல்லாத மிகச் சிலரில் அந்தோணி ஒருவராகவே வாழ்ந்து வந்திருந்தார். எனவே அவரின் இழப்பை அனைவருமே மிகப் பெரிய துக்க நிகழ்ச்சியாகவே நினைத்துக் கொண்டிருந்தனர். இலங்கைக் கடற்படையால் பிடிக்கப்பட்டிருக்கும் பலரின் வீட்டிலும் அந்தோணியின் இறப்பு ஒரு பெரிய பாறாங்கல்லையே தலையில் இறக்கியது.

கடவுள் இல்லை என்று பேசி வந்த பலரும் கூட எல்லா மதத்தையும் சேர்ந்த கடவுள்களையும் கும்பிட ஆரம்பித்தனர். கடலுக்குச் செல்லும் ஒவ்வொருவரின் மனதிலும் அந்தோணி ஒரு முறை வந்து சென்றார். அவர்களுடன் அந்தோணி சிரித்துப் பேசியதே அவர்களின் மனக்கண் முன்னால் வந்து நின்றாலும், அது அவர்களை பயமுறுத்துவதாகவே இருந்தது. படகு முதலாளிகள் அனைவருமே சம்பளத்திற்கு ஆட்களை வைத்து படகு ஓட்டிக் கொள்ளலாம் என்ற முடிவுக்கு வந்தனர்.

சென்ற மாதம் ராசாவிற்கு நான்காயிரம் மட்டுமே கொடுத்தனர். அவர்களால் அதற்கு மேலும் கொடுக்க முடியவில்லை. பணத்தை வாங்கிக் கொண்ட ராசா, "வட்டிக்கு மேல வட்டி வருது. அடுத்த மாசமாச்சும் சரியா குடுங்க. இல்லனா ஒங்களுக்கு தான் கஸ்டம்"

ராசாவின் பேச்சுக்கு மறு பேச்சு பேச முடியாமல் சூசையின் தாத்தா வீட்டுக்கு திரும்பி வந்தார். குடும்பம் எவ்வாறு நடக்கப் போகிறது என்று அவருக்கு கொஞ்சம் கூட விளங்கவில்லை. வீட்டிற்கு வந்து அந்தோணியின் படத்தையும் அதற்கு கொஞ்சம் தள்ளி இருக்கும் திருக் குடும்பப் படத்தையும் பார்க்கும் போதுதான் அவருக்கே தெரிந்தது, கிறிஸ்துமஸ் மற்றும் புது வருடம் இப்பொழுதுதான் முடிந்திருந்தது என்று. ஆனால் அந்த குடும்பத்தில் யாரும் அதைப் பற்றி நினைக்கவில்லை.

சூசை வீட்டுக்கு வந்ததும், "டே சூச. இந்தா முந்நூறு ரூவா. கொண்டு போயி புதுக் கைலி வாங்கிட்டு வா. ஓன் எல்லாக் கைலியும் கிழிஞ்சுருக்கு"

அதைக் கேட்டதும் பணத்தை சூசை கையில் வாங்கிக் கொண்டான். ஆனால் ஜோதி, "என்னப்பா இது. இப்பதான் அவர தூக்கி குடுத்துட்டு ஒக்காந்துருக்கோம். இப்ப போயி கோடி எடுக்கனுமா?"

"எனக்கு தெரியாதாம்மா? கோடி, திருவுழாவுக்குதான் எடுக்க கூடாது. துணி மணி இல்லனா வாங்கக் கூடாதுனு இல்ல. அவங்கிட்ட இருக்க கைலிகள பாரு. எல்லாங்கிழிஞ்சுதான் இருக்கு. எளவட்ட பய வெளில சுத்துறப்ப இப்புடியா சுத்த முடியும்? அதுனால ரெண்டு மூனு கைலி எடுத்துக்கட்டும்"

"இருந்தாலும் ஊரு ஒலகம் என்ன பேசும்? புருசனத் தூக்கி வச்சிட்டு புள்ளைக்கி கோடி எடுத்துக் கொண்டாடுறானு பேசாதா?"

"ஒலகம் பேசுதுனா, ஒம் பையன் கிழிஞ்ச துணி கட்டிட்டு போக நமக்கு ஒப்புமா? அவன் சின்ன பய. அவனுக்கு என்ன தெரியும்?"

இவர்கள் இருவரும் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த சூசை தான் வாங்கச் செல்லலாமா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டே அவர்கள் அருகில் நின்று கொண்டிருந்தான். ஜோதி அதற்கடுத்து எதுவும் பேசாமல் அமைதியாக இருந்ததும் சூசை அதை சம்மதமாக எடுத்துக் கொண்டு கடையை நோக்கி நடந்து கொண்டிருந்தான். ஜோதிக்கு மறுபடியும் அந்தோணியின் நினைவே வந்தது.

சூசை மிக நீண்ட நாட்களுக்கு பிறகு, அந்தோணி உழைக்காத பணத்தில் துணி எடுக்க செல்கிறான். சூசை பிறந்த பொழுது மட்டுமே ஜோதியின் வீட்டாரும் அந்தோனியின் வீட்டாரும் சூசைக்கு துணி எடுத்துப் போட்டனர். அதற்குப் பின் அந்தோணியின் உழைப்பில் மட்டுமே ஜோதியும் சூசையும் துணி எடுத்துக் கொண்டிருந்தனர். ஜோதிக்கு அவ்வப்பொழுது இது போல் நிகழ்வுகள் நினைவில் வந்து அவளை கண்ணீர் சிந்த வைத்துக் கொண்டிருந்தன.

சூசை கடைக்குப் போய்விட்டு திரும்பும் பொழுது இரண்டு வெள்ளை நிறக் கைலிகளும் ஒரு சாம்பல் நிறக் கைலியும் வாங்கிக் கொண்டு வந்திருந்தான். வெள்ளை நிறக் கைலிகளுக்கு அங்கே விலையும் மதிப்பும் அதிகமாகவே இருந்தன. ஏனெனில் வெள்ளை நிறக் கைலிகள் மட்டுமே கட்டியவுடன் அவை புதுக் கைலிகள் என்று தெளிவாக எடுத்துக் காட்டும். துணி எடுக்கப் போகும் பொழுது ஜோதிக்கு இருந்த மனக் கஷ்டம் இப்பொழுது இல்லை. சூசையின் தாத்தா கைலிகளை

பிரித்துப் பார்த்துக் கொண்டே விலைகளை விசாரித்துக் கொண்டிருந்தார். சூசையும் மூன்று கைலிகளின் விலையையும் கூறினான். துணி வாங்கியது போக மீதிப் பணம் இருப்பது மூவருக்குமே தெரிந்தாலும் ஒருவரும் அதைப் பற்றி பேசவில்லை. அவன் வைத்துக் கொள்ளட்டும் என்று விட்டு விட்டனர்.

அடுத்த நாள் சட்டைப் பையில் மீதம் இருந்த பணம் அறுபது ரூபாயை வைத்துக் கொண்டு செல்லும் பொழுது தன்னால் எதையும் வாங்க முடியும் என்பது போல அவன் மனது நினைத்துக் கொண்டிருந்தது. சில நாட்களாக பெண் வரிசைக்கு பின்னால் அமர்ந்திருக்கும் பாபு வருவதில்லை. அந்த இடத்தில் தான் அமர்ந்து கொள்ள வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தான். பள்ளிக்குச் சென்று பாபு இடத்தில் அமர்ந்து கொண்டான். இரண்டு இருக்கைகள் முன்னால் தான் மலர்விழியின் இருக்கை. அவளுடன் பேசுவதற்கு அடிக்கடி சந்தர்ப்பம் அமையலாம் என்று நினைத்துக் கொண்டான். மலர்விழி இன்னும் அவள் இடத்திற்கு வரவில்லை.

அவனுடைய வகுப்புத் தோழன் சேகருக்கு அன்று பிறந்த நாள். எனவே அவன் வகுப்பு நண்பர்களுக்கு இனிப்பு கொடுத்துக் கொண்டிருந்தான். அவன் கொடுத்து முடித்ததும் சிறிது நேரம் கழித்து மலர்விழி வந்தாள். சேகர் வகுப்பிற்கு கணக்கிட்டு எடுத்து வந்திருந்தான். இருந்தாலும் வரும் வழியில் இரு ஆசிரியர்களுக்கு கொடுத்ததால் இப்பொழுது மலர்விழிக்கு கொடுக்க ஒன்றுமில்லை.

சூசை தன்னிடமிருந்ததை கொடுக்கலாம் என்று நினைத்தவன், அந்த முடிவை மாற்றிக் கொண்டு, "சேகரு, நான் காசு தர்றேன். போயி சாக்லேட்டு வங்கிட்டுவந்து குடுக்காதவங்களுக்கு குடு" என்று கொஞ்சம் சத்தமாகவே கூறினான். சேகருக்கும் இது சரியான யோசனை என்று தோன்றவே அவனிடம் பணம் வாங்கிக் கொண்டு சென்று இனிப்பு வாங்கிவந்து மலர்விழிக்கு கொடுத்தான்.

## -அத்தியாயம் : 19-

அன்று மாலை மலர் கொஞ்சம் சந்தோஷமாகவே வீட்டிற்கு வந்தாள். மலர்விழி வீட்டை நெருங்கியதும் அவளால் என்ன நடந்திருக்கும் என்று யூகிக்க முடிந்தது. வீட்டிற்கு வெளியே இருந்த அழுத்தமான தடங்களைப் பார்த்ததும் அவளுடைய அம்மா எப்பொழுதும் நாராயணனிடம் வாங்குவதைப் பெற்றிருப்பாள் என்று தெரிந்துகொள்ள முடிந்தது.

ஆனால், சத்யாவோ நாராயணனோ அந்த நேரம் வீட்டில் இல்லை. பள்ளியிலிருந்து வரும்பொழுது இருந்த சந்தோஷம் முற்றிலும் வற்றியிருந்தது. பள்ளிப் பையை வைத்து விட்டு என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருந்தாள். அம்மா அனேகமாக அவளுடைய அப்பா வீட்டிற்குதான் சென்றிருப்பாள். அவளைப் போய் அழைத்துக் கொண்டு வரலாமா என்று யோசித்தவள் பிறகு வேண்டாம் என்று முடிவு செய்து அதே இடத்தில் சிறிது நேரம் அமர்ந்திருந்தாள்.

கொஞ்ச நேரம் கழித்து வீட்டிற்குள் நுழைந்தவள் உடைகளை மாற்றிக் கொண்டு பாத்திரங்களை கழுவி வைத்துக் கொண்டிருந்தாள். அவள் பாத்திரங்களை கழுவ ஆரம்பித்த சிறிது நேரத்தில் சத்யா வீட்டிற்குள் நுழைந்தாள்.

"திரும்பவும் ஒங்க வேலைய ஆரம்பிச்சிட்டியளா? சண்ட போடாம ஒங்க ரெண்டு பேராலயும் இருக்க முடியாதா?"

"இவ ஒருத்தி. நா என்னடி பண்ணேன்? ஒன் அப்பாவுக்குத்தானடி ஒரு வேலயும் இல்லாம என்னப் போட்டு அடிக்குறாரு. வெளில இருக்க கோவத்த எல்லாமே வீட்டுல தான் வந்து காட்டுறாரு. ஒன் அப்பா போறதப் பாத்தா திரும்பவும் வந்து அடிப்பாருனு நெனக்கிறேன். வா அவரு வர்றதுக்குள்ள ஒன் தாத்தா வீட்டுக்கு போயிருவோம்"

"இல்லம்மா. எனக்கு அங்க ஒரு மாதிரி இருக்கு. நீ போய்ட்டு வா".

"நீ தனியா என்னடி பண்ணுவ? என்னோட வாடி. ஒன் அப்பா வர்றதுக்குள்ள வெரசா போய்டுவோம்"

"நீ வேணா இப்ப போமா. நா அப்பறமா வர்றேன்"

மலர்விழி சொல்வதைக் கேட்டு சத்யாவிற்கு விருப்பம் இல்லையென்றாலும் நாராயணன் வருவதற்குள் செல்லவில்லை யென்றால் திரும்பவும் தனக்கு அடிவிழும் என்பதால், தான் முன்னே செல்வதாகவும் அவளை முடிந்த அளவு சீக்கிரம் வருமாறும் சொல்லிவிட்டு வீட்டைவிட்டுச் சென்றாள். ஆனால் மலர்விழிக்கு அங்கே செல்ல கொஞ்சமும் விருப்பம் இல்லை. இரவு நாராயணன்

வீட்டுக்கு வந்ததும் மலர்விழி அவருக்கு சாப்பாடு எடுத்துக் கொடுத்தாள். இருவரும் எதுவும் பேசிக் கொள்ளவில்லை. நாராயணனுக்கு மலர்விழியின் மேல் பரிதாபமே இருந்தது. மலர்விழியின் மனக் கஷ்டத்தை நாராயணனால் புரிந்துகொள்ள முடிந்தது. அந்த நினைப்பை போக்குவதற்காக ஏதேனும் பேச வேண்டும் என்று நினைத்து, "ஒன் அம்மா எங்க போய்ட்டா? அவ அப்பா வீட்டுக்குப் போய்ட்டாளா?".

"ஆமா. ஆஸ்பத்திரிக்கு போய்ட்டு வந்தாக. வந்துட்டு கொஞ்ச நேரத்துல போய்ட்டாக".

"ஒன்ன தனியா வீட்ல விட்டுட்டு அவ பாட்டுக்கு போய்ட்டாளா?'

இது நாராயணனுக்கு கோபத்தை உண்டு பண்ணும் என்று மலர்விழி நினைத்ததால், "இல்ல. என்னயுந்தான் கூப்புட்டாக. நாந்தான் போகல".

"சரிம்மா, நீ உள்ள படுத்துக்க. நான் வெளில படுத்துக் கெடக்கேன். ஏதாவது ஒன்னுன்னா சத்தங்குடு".

மலர்விழி சரியென்று தலையாட்டிவிட்டு சாப்பிட்டு முடித்த தட்டுக்களையும் பாத்திரங்களையும் கழுவிவைத்தாள். எல்லா வேலைகளும் முடிந்ததும் விளக்கை அணைத்துவிட்டு, பாயை விரித்துப்படுத்தாள். நாராயணன் திண்ணையில்வந்து படுத்துக் கொண்டார். தனக்கு புதிய பொறுப்பு வந்திருப்பதுபோல நினைத்துக்கொண்டு கண்மூடித் தூங்க முயற்சித்தார்.

காலையில் எழுந்து நாராயணன் பார்க்கும் பொழுது மலர்விழி இன்னும் தூங்கிக் கொண்டிருந்தாள்.

"ஏ மலரு. என்னம்மா இன்னந்தூங்குற?"

"ஒண்ணுமில்லப்பா. ஒடம்பு சரியில்ல".

மகளின் பதிலில் இருந்தே அவளின் நிலையைப் புரிந்துக்கொண்ட நாராயணன் வெளியே சென்று, அவளுக்கு சாப்பிட வாங்கி வந்து வைத்துவிட்டு, அவசர அவசரமாக கடலுக்கு ஓடிச் சென்றார். மலர்விழி தாமதமாகவே எழுந்தாள். எந்தவொரு வேலையும் அவளால் செய்ய முடியவில்லை. அவள் அன்று பள்ளிக்கும் செல்ல முடியாது என்று திரும்பவும் படுத்துக் கொண்டாள். கொஞ்ச நேரம் கழித்து, அவள் அப்பா வாங்கி வைத்திருந்த உணவை சாப்பிட்டு விட்டு என்ன செய்வது என்று தெரியாமல் திரும்பவும் படுத்துக் கொண்டாள்.

அன்று முழுவதும் அவளது வயிற்று வலி சரியாகவில்லை. படுத்தே கிடந்தாள். வலி குறைந்ததாக தெரியவில்லை. சுருண்டு சுருண்டு பார்த்தாள். அவள் அம்மா மீதும் அப்பா மீதும் அவளுக்கு அதிகப்படியான கோபம் வந்தது. யாரையாவது திட்ட வேண்டும்

போலிருந்தது. இவர்களது மகளாகப் பிறந்தது தனது சாபம் என்றுகூட தன்னைத் தானே நொந்து கொண்டாள்.

பள்ளிக்கூடத்துக்குச் சென்றிருந்தால் கூட இவ்வளவு வலி இருந்திருக்காதோ என்றுகூட நினைத்தாள். தனியாகக் கிடப்பதன் வெறுமை அவளைச் சுட்டது. பள்ளியைப் பற்றி நினைத்ததும் சூசையைப் பற்றி நினைத்தாள். இந்த நேரத்தில் சூசையைப் பற்றி நினைப்பது அவளுக்கு இதமாக இருந்தது. பள்ளி முடிந்து சூசை ஒருவேளை இந்தப் பக்கம் வரலாம் என்று நினைத்துக் கொண்டாள். மணியைப் பார்த்தாள். விடும் நேரம் தான். முகங்கழுவி, தலைசீவிவீட்டு வாசலில் வந்து அமர்ந்து கொண்டாள். அவள் எதிர்பார்த்தது போலவே மாலை நேரத்தில் சூசை அவள் வீட்டு வழியே சென்றான். அவன் பார்வையில் தான் பரிபூர்ணமடைவது போல உணர்ந்தாள்.

அன்றைய இரவு மலர்விழி தனியாகவே வீட்டிலிருந்தாள். அவளுக்கு பயமாக இருந்தாலும் உடல் அசதியில் சீக்கிரமாகவே உறங்கிவிட்டாள். அம்மா இல்லாததால் அடுத்த நாளும் தாமதமாகவே எழுந்தாள். நாராயணன் கடலிலிருந்து வந்து எழுப்பியபோதுதான் விடிந்துவிட்டதையே உணர்ந்தாள். வயிற்று வலி கொஞ்சம் குறைந்திருப்பதாகத் தோன்றியது. சத்யா வீட்டில் இல்லாததால் மலர்விழியே நாராயணன் கொண்டுவந்திருந்த மீனையும் இறாலையும் எடுத்து சமைக்க ஆரம்பித்தாள்.

சூசை ஒருமாதிரி ஏமாற்றத்தோடே திரிந்தான். பார்த்தாலும் பேசமுடியவில்லை என்கிற தவிப்பு அவனைப் போட்டு வெறும் கலத்தை ஆழி உருட்டி அடிப்பது போல உருட்டியது. இரண்டாவது நாளாகவும் அவள் பள்ளிக்கூடம் வராததால் குழப்பமாக இருந்தான். மறுபடியும் அவள் வீட்டில் ஏதும் சண்டையோ என்று கூட நினைத்தான். நாராயணன் மீது அவனுக்கு லேசாக கோபம் கூட வந்தது. நண்பர்களுடன் பேசும் நேரம் தவிர ஆசிரியர்கள் பாடம் எடுக்கும் பொழுது அவன் மலர்விழியைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தான். இன்றைக்கு அவளோடு எப்படியாவது பேசிவிடவேண்டும் என்று முடிவு எடுத்துக் கொண்டான். மலர்விழியும் அதற்காகவே காத்திருந்தவள் போலத் தன்னை அலங்கரித்துக் கொண்டு காத்திருந்தாள்.

## -அத்தியாயம் : 20-

பள்ளி விடும் நேரத்தையும் சூசை வரும் நேரத்தையும் கணக்கிட்டு கடைக்கு புறப்பட்டாள். மனசு அலைபாய்ந்தாலும் கால்கள் தடுமாறின. மெதுவாகவே நடந்து கொண்டிருந்தாள். ஆனாலும் சூசை கண்ணுக்கெட்டிய தூரம்வரை அவன் வரவில்லை. கடையில் வேண்டுமென்றே ஒரு பொருளை குறைத்து வாங்கிவிட்டு, கொஞ்ச தூரம் வீட்டை நோக்கி நடந்தவள், பாதிதூரம் நடந்ததும் திரும்பவும் கடையை நோக்கி நடந்தாள். எதிரே சூசை வருவதைப் பார்த்த மலர்விழிக்கு கொஞ்சம் திருப்தி. ஆனால் என்ன பேசுவது என்று தெரியாமல் யோசித்துக் கொண்டே நடந்தாள்.

அருகே சென்றதும், "என்ன மலரு. கொஞ்ச நாளா ஸ்கூல் பக்கமே ஆளக் காணோம்"

"ஒடம்பு கொஞ்சம் முடியல. அதான் வரல. இந்த வாரம் புல்லா நான் வர மாட்டேன். நீங்க என்ன பண்றீங்க ஸ்கூல்ல?" தான் முழுவதும் பள்ளிக்கு வர மாட்டேன் என்று கூற மலர்விழிக்கு ஏனோ அப்பொழுது விருப்பம் இல்லை.

"சும்மாதான் இருக்கோம். எப்பயும் மாதிரி தான். ஒரு நாளக்கி ரெண்டு மூணு சாரு வர்றாக. அவ்வளவுதான்".

"சரி, சரி. படிச்சு கலெக்டர் ஆனோடன எங்களலாம் மறந்துறாத" என்று சொல்லிவிட்டு நடந்து கொண்டிருந்தாள். அதற்கு மேல் நின்று பேசிக் கொண்டிருந்தால், அது வேகமாகவும் மிக மோசமாகவும் மற்றவர் காதுகளுக்குச் சென்று விடும் என்று அவர்களுக்குத் தெரியும்.

சில வருடங்களுக்கு முன்னால், கலைச் செல்விக்கும் கோபிக்கும் நடந்த நிகழ்ச்சி மலர்விழியின் மனதில் வந்து சென்றது. கோபியும் கலைச் செல்வியும் பேசுவதைப் பார்த்த சிலர் அவர்களின் குடும்பத்தில் சொல்லவும், அந்த கொடூரம் நடந்தது. இந்த விஷயம் கேள்விப்பட்ட இரண்டு நாளில், கலைச் செல்வியின் வீட்டில் கலைச் செல்வியின் பிணம் தொங்கிக்கொண்டிருந்தது. அந்த குடும்பத்தில் சிலரே இந்த காதல் விவகாரம் பிடிக்காமல் கலைச் செல்வியைக் கொன்று விட்டதாக ஊருக்குள் பேசிக் கொண்டனர்.

மறுநாள் காலை கடலுக்குச் செல்ல ஆள் கிடைக்கவில்லை. மூன்று பேர் மட்டுமே வந்திருந்தார்கள். "இது என்னடா பெரிய ரோதனையா இருக்கு. சம்பளத்துக்கு ஆளப் புடிக்குறதுக்குள்ள மனுச சீவன் போகுது" என்று சூசையின் தாத்தா நொந்து கொண்டார்.

"நாங்க மூனு பேரு போறொம். அது ஒண்ணுங் கஸ்டமுல்ல"

"அட நீ ஒரு ஆளு. ஒன்னு கெடக்க ஒன்னு ஆச்சுன்னா தொணக்கி கூட ரெண்டு பேரு வேணாமா?"

இதைக் கேட்டுக் கொண்டிருந்த சூசை, "தாத்தா, நான் வேணுன்னா, இன்னைக்கி போகவா?"

"நீ வேற. அன்னைக்கி லீவு நாளு. கடலுக்கு போன. இன்னக்கி லீவா? ஸ்கூலுக்கு போடா".

"இன்னைக்கி பழனி சாருக்கு கல்யாணம். அதுனால எல்லாரும் அங்க போயிருவாகளாம். யாருமே இன்னக்கி வர மாட்டாங்கனு நேத்தே சொல்லிட்டாக. அதுனால போனாலும் போகலைனாலும் ஒன்னுதான்".

அந்தப் பள்ளியில் வேலை பார்க்கும் ஆசிரியர் பழனிக்கு அன்று திருமணம் என்பது உண்மைதான். ஆனால் அது மட்டுமே காரணம் அல்ல. மலர்விழி பள்ளிக்கு வராததே முக்கியமான காரணம். மேலும் படகிற்கு செல்ல ஒருவர் குறைந்ததும் அவன் கடலுக்குச் செல்லலாம் என்று முடிவெடுத்தான். கடலுக்குச் சென்றதும் உள்ளே சென்று படுத்து விட வேண்டும் என்று முடிவு செய்து கொண்டான். இலங்கை கடற்படை இப்பொழுது இவன் நினைவில் இல்லை. படகிற்கு வந்ததும்தான் உள்ளே சென்று படுத்துக் கொள்ளலாமா என்று பக்கத்தில் இருந்தவர்களிடம் கேட்டான்.

"லாஞ்சிய ஸ்டாட் பண்ணதும் படுத்துக்கிட்டா தொழிலு வெளங்காதுப்பா. கொஞ்ச நேரம் இரு. அப்பறமா போயி படுத்துக்கலாம்"

இதைக் கேட்டதும் சூசை கொஞ்சம் ஏமாற்றம் அடைந்தவனைப் போல நின்று கொன்டிருந்தான். எப்பொழுது தன்னை உள்ளே சென்று படுக்கச் சொல்வார்கள் என்று காத்துக் கொண்டிருந்தான். ஆனால், யாரும் அவனை உள்ளே சென்று படுக்கும்படி சொல்லவில்லை. கொஞ்சநேரம் கழித்து, அவன் எதிர்பார்த்தது போலவே தலைசுற்ற ஆரம்பித்தது. தனக்கு வாந்தி வருவதற்குள் உள்ளே சென்று படுத்துக்கொள்ள வேண்டும் என்று நினைத்துக் கொண்டான். ஆனால், அவனால் முடியவில்லை. அதற்குள் அவனுக்கு வாந்தி வந்தது. அவனுக்கு அவனைச் சுற்றி இருந்தவர்கள் மேல் கோபம் கோபமாக வந்தது.

தன்னை அப்பொழுதே படுக்க சொல்லியிருந்தால் தனக்கு தலை சுற்றலும் வாந்தியும் வந்திருக்காது என்று நினைத்துக் கொண்டிருந்தான். பிறகு கூட இருந்தவர்களிடம் "தல ரெம்ப சுத்துது. கொஞ்ச நேரம் படுத்துக்கறேன்"

அவர்கள் சரி என்றதும் சென்ற முறை படுத்த அதே இடத்தில் படுத்துக் கொண்டான். அவனால் உடனே தூங்கி விட முடியவில்லை. படகு அலைகளில் அசைவதை அவன் உணர்ந்து கொண்டே இருந்தான். அவனுக்கு விரைவில் உறக்கம் வரவில்லை. தலை சுற்றலும் கொஞ்சம் கொஞ்சமாக அதிகமாகிக் கொண்டே வந்தது. கரையிலிருந்து கடல் தொழிலைப் பற்றி நினைக்கும் பொழுது எளிதாகவும், கடலுக்கு வந்து விட்டால் அதே தொழில் கடினமானதாகவும் அவனுக்குத் தோன்றுகிறது. கொஞ்ச நேரம் கழித்து அவர்கள் சாப்பிட கூப்பிட்டதும் சாப்பிட்டு விட்டு வந்து திரும்பவும் அதே இடத்தில் படுத்துக் கொண்டான். இரவு நேரம் போர்வையைப் போர்த்திக் கொண்டு படுத்ததுமே அவனுக்கு உறக்கம் வந்தது. அந்தப் போர்வை போன முறை இருந்ததை விட அதிகமான வாடையுடன் இருந்தது. இருந்தாலும் அவன் அதையெல்லாம் கண்டு கொள்ளும் மன நிலையில் இல்லை.

சனிக்கிழமை காலை கடலுக்குச் சென்றவன், ஞாயிற்றுக் கிழமை வீட்டுக்கு வந்ததும் அடுத்த நாள் பள்ளிக்குச் செல்ல வேண்டும் என்ற முடிவிலிருந்தான். அடுத்த நாள் பள்ளிக்குப் போகும்பொழுதும் அங்கே மலர்விழி இல்லை. அவனுக்கு மிகப் பெரிய வருத்தமாக இருந்தது. எப்பொழுது மாலையாகும், வீட்டிற்குச் செல்லலாம் என்று எண்ணிக் கொண்டிருந்தான். மாலையில் மலர்விழியைப் பார்த்ததும், 'என்ன மலரு, இன்னக்கும் ஸ்கூலுக்கு வரல. இன்னமா ஒடம்பு சரியாகல?"

'அப்புடிலாம் இல்ல. இனிமே ஸ்கூலுக்கு வர வேணாமுனு பாக்குறேன். படிப்பு சரியா வரலனு மொதல்லருந்தே வீட்ல சொல்லிட்டிருந்தாக. அதான் படிச்சு ஒன்னும் ஆகப் போறதில்லனு, ஸ்கூலுக்கு போகலனு சொல்லிட்டேன்".

சூசைக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. தானும் பள்ளிக்குச் செல்ல வேண்டுமா என்று நினைத்துக் கொண்டான். ஆனாலும் வீட்டில் பள்ளிக்குப் போக விருப்பம் இல்லையென்று சொல்ல முடியாது என்பதால் இப்போதைக்கு எதுவும் சொல்ல வேண்டாம் என்ற முடிவுடன் வீட்டுக்கு வந்தான். அன்றைய இரவு கொஞ்சம் நீண்ட இரவாகவே சூசைக்கு இருந்தது. தூங்கி எழுந்து பள்ளிக்குச் சென்றான். மலர்விழி பள்ளிக்கு வர மாட்டாள் என்று தெரிந்ததால், ஒரு விருப்பம் இல்லாமலே பள்ளிக்குச் சென்றான். மலர்விழி அந்த சமூகத்தில் ஒன்றி

விட்டாள். அந்த இடங்களில் இது சாதாரணமாக நடப்பதுதான். பள்ளியிலிருந்து பாதியிலேயே நிற்பது மலர்விழிக்கு மட்டும் நடந்ததில்லை.

மலர்விழி பள்ளிக்குச் செல்லவில்லை என்பதை அறிந்த சத்யா வீட்டிற்கு வந்தாள்.

"என்னடி. ஸ்கூலுக்கு போக மாட்டியா? வீட்டு வேலய இனி நா பாத்துக்கறேன். நீ ஸ்கூலுக்குப் போ"

"இல்லம்மா. ரெம்ப நாளு ஸ்கூலுக்கு லீவு போட்டுட்டேன். இனி ஸ்கூலுக்கு போனா என்ன ரெம்ப பேசுவாக"

இதைக் கேட்ட சத்யா, தான் இவ்வளவு நாட்கள் வீட்டில் இல்லாததே காரணம் என்று நினைத்துக் கொண்டாள். திரும்பவும் வீட்டில் வந்து இருந்து கொண்டாள், சத்யா. அன்றிலிருந்து இனிமேல் குடிக்கக் கூடாது என்று முடிவு எடுத்துக் கொண்டார், நாராயணன். ஏற்கனவே பலமுறை எடுக்கப்பட்ட முடிவுதான் என்றாலும், இந்தமுறை அந்த முடிவில் உறுதியாய் இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டார். மலர்விழி பள்ளிக்குப் போக வேண்டாமென்று முடிவு எடுத்திருந்தது, பலரின் மனநிலையிலும் மாற்றத்தை உண்டு பண்ணியிருந்தது. வீட்டிலிருந்தவர்களின் மனநிலையில் மட்டுமல்லாது, வேறு வீட்டைச் சேர்ந்த சூசையின் மனநிலையிலும் கூட பெருத்த மாற்றம் உண்டாகியிருந்தது.

சூசை விருப்பமில்லாமல் பள்ளிக்குச் சென்றாலும், பள்ளியை விட்டு நிற்க வேண்டுமென்ற எண்ணம் அவனிடம் அப்பொழுது இல்லை. அவனுடைய குடும்பச் சூழ்நிலை அவனுடைய மனநிலையைக் கொஞ்சம் கொஞ்சமாக மாற்றிக் கொண்டிருந்தது. அவனுடைய தாத்தா தினமும் இரவு கணக்கு வழக்குகளை சொல்லும் பொழுது, ஒரு பக்கம் ராசாவிடம் வாங்கிய கடனுக்கு வட்டி கூடிக் கொண்டிருப்பதையும் கூறிக் கொண்டிருந்தார். அவனுக்கு அவனுடைய வாழ்க்கை கஷ்டமாக இருப்பது போல் முதன் முறையாக உணர்ந்தான். சென்ற வாரம் ராசா வந்து கடன் நான்கு லட்சத்து இருபதுக்குமேல் போவதாக சொல்லிவிட்டு சென்றார். ராசா நான்கு லட்சம் என்று கணக்கு சொல்லியும் பின்னர் மாதா மாதம் பணம் கொடுத்தும் அதிகமாகவே கடன் இருப்பது அவனுக்கு வியப்பாகவே இருந்தது.

## -அத்தியாயம் : 21-

நண்பர்களுடன் விளையாடப் போவதையோ வெளியே செல்வதையோ வெகுவாகக் குறைத்திருந்தான் சூசை. அவன் ஒரு முடிவு எடுத்து வீட்டை நோக்கி வேகமாக சென்று கொண்டிருந்தான். தான் இனிமேல் பள்ளிக்கு வரக் கூடாதென்று முடிவு எடுத்தான். ஏதோ ஒரு மனநிலையில் தன்னுடைய புத்தகங்களில் ஒன்றை வகுப்பறையிலேயே மறந்து வைத்து விட்டு வந்தான். அவனுடைய ஞாபகத்திற்காக அந்த வகுப்பறை அந்த புத்தகத்தை அதனுடன் வைத்துக் கொண்டது.

சாயங்காலத்திலிருந்து வீட்டில் உள்ளவர்களிடம் சொல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தவன், எப்படி சொல்வது என்று தெரியாமல் சரியான சந்தர்ப்பத்திற்காக காத்துக் கொண்டிருந்தான். யாரும் அவனைக் கோபமாக பேசியதோ அடித்ததோ இல்லையென்றாலும் இந்த விஷயத்தைச் சொல்வதற்கு கொஞ்சம் பயந்துபோய் இருந்தான். இரவு நேரத்தில் தானே பேசலாம் என்று நினைத்து, "தாத்தா. ராசாட்ட வாங்குன கடன் எவ்வளோ இருக்கு?"

"நேத்துப் பாத்தப்பக் கூட நாலு லச்சத்தி இருவத்தஞ்சு இருக்குனு சொன்னான். தொழிலும் ஒழுங்கா நடக்கல. வர்ற காசுல பாதி கடனுக்கு தான் போகுது"

“தாத்தா, நான் இனி கடலுக்கு போகலாம்னு பாக்குறேன். சம்பளக் காசு மிஞ்சும்ல!"

"அதுலாம் ஒன்னுமில்ல. இதவிட பெரிய கஷ்டத்துலலாம் இருந்துருக்கோம். இந்த லாஞ்சி வாங்குரதுக்கு முன்னால ஒன் அப்பா சம்பளத்துக்கு தான் போனாரு. அப்பல்லாம் இருந்த கஷ்டத்த விட இது ஒன்னும் பெரிய கஷ்டமுல்ல" என்று வேதனையுடன் இருந்த ஜோதி இவர்களின் உரையாடலில் பங்கெடுத்தாள்.

"இல்லம்மா. நானும் படிச்சு என்ன ஆகப் போறேன்? இல்லன்னா, நான் மட்டுமா கடலுக்கு போறேன்? சதீசு ஏழாங்க்லாசு படிக்குறப்பவே கடலுக்கு போனான். கடலுக்கு போறதுலாம் ஒரு கஸ்டமும் இல்ல"

"ஆமாமா. நீ கடலுக்கு போனதும் வீலஸ்குள்ள படுத்து தூங்குற. கொஞ்ச நேரம் லாஞ்சி ஆடுனாலே ஒனக்கு வாந்தி வருதுனு சொல்றாய்ங்க. ஸ்கூலுக்கு போய்ட்டு வா. மத்தத அப்பறம் பாத்துக்கலாம்"

இவர்கள் சொல்வதைக் கேட்டு அவனுடைய மனநிலை கொஞ்சம் கூட மாறவில்லை. மாறாக அவர்களுடைய பேச்சு அவனை எதிர் திசையில்

உந்தித்தள்ளியது. அவன் ஏழாவது படிக்கும் பொழுது அவனுடைய வகுப்புத் தோழன் சதீஷ் கடலுக்குச் சென்றதையும், சென்ற பின் அவனுடைய மாற்றத்தையும் நினைத்துப் பார்த்தான். இருவருக்கும் ஒரே வயதுதான் என்றாலும் அவனுடைய தோரணை ஒரு பெரிய மனிதனைப் போன்ற தோற்றத்தை இவனுக்கு உண்டாக்கியது.

சதீஷ் இவனுடன் ஒன்றாகப் படித்தவன். இவனைப் போலவே படிப்பவன். ரொம்ப நன்றாகப் படிப்பவன் என்றோ, மிக மோசமாக படிப்பவன் என்றோ சொல்லிவிட முடியாது. பள்ளிக்கு வந்து கொண்டிருந்தவன் திடீரென்று கொஞ்ச நாள் பள்ளிக்கு வரவில்லை. என்னவென்று விசாரித்த பொழுது அவன் அப்பாவிற்கு உதவியாக கடலுக்குச் சென்று விட்டதாக கூறினார்கள். சதீஷ் அக்காவிற்கு திருமணம் செய்து வைக்கவும், வீட்டிலிருந்த கடனை திருப்பி செலுத்தவுமே சதீஷைப் பள்ளியிலிருந்து நிறுத்தி விட்டதாக சூசையின் அப்பாவும் அம்மாவும் ஒரு நாள் இரவு பேசிக் கொண்டிருந்தனர்.

சூசை, சதீஷை சந்தித்ததை இப்பொழுது நினைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான். அப்பொழுதெல்லாம் தான் இப்படி ஒரு சூழ்நிலைக்கு ஆளாகுவோம் என்று கொஞ்சம் கூட நினைத்துப் பார்த்தது இல்லை. சூசை கொஞ்சம் கொஞ்சமாய் வலையில் விழுந்து கொண்டிருந்தான்.

அடுத்தநாள் காலை சூசை பள்ளிக்குச் செல்லாமல் நேராக படகுக்குச் சென்று விட்டான். அவனுடைய அம்மாவும் தாத்தாவும் சொன்ன வார்த்தைகள் அவனை எதிர்மறையாக தூண்டிவிட எப்படியும் கடலுக்குச் செல்ல வேண்டும் என்று படகில் ஏறி வந்து விட்டான். எப்பொழுதும் வரும் நால்வருடன் சூசையும் சேர்ந்து ஐந்து பேராக கடலுக்குச் சென்றனர். தாத்தா தன்னால் விழித்திருக்க முடியாது என்று சொன்னதால் இன்று தன்னால் முடிந்த அளவு விழித்திருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டு படகு ஆழத்தை நோக்கிச் செல்லும் பொழுது மேலேயே நின்று கொண்டிருந்தான்.

வீட்டில் ஜோதி மிகுந்த மன வருத்தத்தில் இருந்தாள். சூசை கடலுக்குச் செல்வது அவளை மிகுந்த வருத்தத்திற்கு உள்ளாக்கியிருந்தது. அந்தோணி கடலுக்குச் செல்லும் பொழுது என்ன நடக்குமோ என்று பயந்து கொண்டே இரவைக் கழிப்பது இப்போதுதான் கொஞ்ச நாள் நின்றிருந்தது. இந்த சூசையால் திரும்பவும் அந்த கஷ்டம் வந்து விடுமோ என்று பயந்து கொண்டிருந்தாள்.

"விடுமா. அவனால ரெண்டு கடலுக்கு மேல போக முடியாது. அவனே போக மாட்டேன்னு நின்றுவான். நீ ஒண்ணும் பயப்புடாத".

"அதுக்கில்லப்பா. நம்ம இவ்வளோ சொல்லியும் அவங் கொஞ்சங்கூட

கேக்கல. சொன்னதுக்காச்சும் ரெண்டு நா ஸ்கூலுக்கு போய்ட்டு அப்பறம் கடலுக்குப் போயிருக்கலாம்ல"

ஜோதியை எப்படி சமாதானப் படுத்துவது என்று தெரியாமல் அவரும் அமைதியாக இருந்துவிட்டார். அன்றைய நாள் முழுவதும் ஜோதி சோகமே உருவாக அமர்ந்திருந்தாள். சிறிது நேரம் கழித்து டேவிட் அவர்கள் வீட்டிற்கு வந்தார். "அத்தாச்சி, என்ன இந்த சூச பய கடலுக்குப் போய்ட்டான்? அவனுக்கு இன்னைக்கி லீவா?"

"அவனுக்கு ஸ்கூல் இருக்கு. நாங்க எவ்ளோ சொல்லியும் கேக்காம கடலுக்குதான் போவேன்னு போய்ட்டான். ராசாட்ட வாங்குன கடன் அதிகமா இருக்கதுதான் அவனுக்கு மனசு கஸ்டமா இருந்துருக்கு."

"அதுக்கு என்ன பண்றது? யாருக்கு தான் இங்க கடன் இல்ல. அவன லாஞ்சில பாத்தோடன இன்னைக்கி லீவாக்குனு நெனைச்சுட்டென். இல்லனா, அவன புடிச்சு இழுத்துட்டு வந்துருப்பேன்"

டேவிட்டிற்கு சூசை என்றால் ரொம்பப் புடிக்கும். தன்னுடைய மகன் போலவே பார்த்துக் கொள்வார். டேவிட்டிற்கு பத்து ஆண்டுகளாகியும் குழந்தை இல்லாததால், சூசையை தன் மகன் போலவே நினைத்துக் கொண்டார். டேவிட் திருமணமாகி இரண்டு ஆண்டுகள் வரை குழந்தை இல்லாததை பெரிய குறையாக எடுத்துக் கொள்ள வில்லை. அதற்கு மேல் மருத்துவர்களை சந்தித்தும், அவர்கள் இருவருக்கும் எந்தவொரு குறை இல்லை என்று சொல்லியும் இந்த பத்து ஆண்டுகளாக அவர்களுக்கு குழந்தை இல்லை.

மருத்துவர்களுக்கு செய்த செலவைப் போலவே, ஜோதிடர்களுக்கும் செய்தும் எந்தவொரு பலனும் இல்லாமல் போய்விட்டது. இருந்தும் அவர்கள் இன்னும் செலவை செய்து கொண்டே இருக்கின்றனர். காலம் வளர்ந்து வருவதைப் போல ஒவ்வொரு ஜோதிடரும் அவர்களின் தேய்ந்து கொண்டிருந்த நம்பிக்கையை வளர்த்துக் கொண்டிருந்தனர். படகில் சூசை தலை வலியை தாங்கிக்கொண்டு மற்ற வேலைகளைக் கற்றுக் கொள்ள ஆரம்பித்தான். சிறு வேலை கூட அவனுக்கு ஏதோ பெரிய வேலை செய்த திருப்தியை தந்தது. எப்பொழுதும் வரும் வாந்தி அவனுக்கு இப்பொழுது வரவில்லை. படகு அவனைக் கொஞ்சம் கொஞ்சமாக தன்வசம் ஈர்த்துக்கொண்ட சந்தோசத்தில் சீறிக்கொண்டிருந்தது.

## -அத்தியாயம் : 22-

இலங்கைக் கடற்படை, சூசையின் படகு வரும் என்றோ அதைப் பிடிக்க வேண்டும் என்றோ நோக்கம் இல்லை என்றாலும், சூசையின் படகும் இலங்கை கடற்படையின் படகும் ஒரு நாள் சந்தித்துக் கொள்ளும் என்று சந்தர்ப்பம் முன்னாலயே குறித்து வைத்துக் கொண்டது. எல்லோருக்கும் அந்த சந்திப்பும், பாதிப்பும் எப்படியும் நடந்து விடும் என்று தெரிந்திருந்தது. ஆனாலும், அந்த சந்திப்பை முடிந்த அளவு தாமதமாக்க வேண்டும் என்று இலங்கை கடற்படைக்கு நேர் எதிராகவே ஒடிக் கொண்டிருந்தனர். அங்கே கடலுக்குச் செல்லும் எல்லோருமே ஏதோவொரு வகையில் இலங்கைக் கடற்படையால் பாதிக்கப் பட்டவர்களே. அந்தோணி, நாராயணன் போன்று நேரிடையாகவோ அல்லது சூசை போல மறைமுகமாகவோ.

அடுத்த நாள் டேவிட் வந்து சூசையிடம் பள்ளிக்குச் செல்லுமாறும், கடலுக்குப் போவதை நிறுத்தி விடுமாறும் கூறினார். சூசையும் முடிந்த அளவு தன்னுடைய கருத்தைக் கூறினான். இருவரும் அவரவர் முடிவுகளில் உறுதியாக இருந்தனர். முதன் முதலாக டேவிட் சொல்வதை சூசை மீறினான். அடுத்தநாள் திரும்பவும் கடலுக்குச் சென்றான்.

சூசை கடலுக்குச் செல்ல ஆரம்பித்து மூன்று மாதங்கள் ஆகியிருந்தன. படகு வேலைகளை மட்டும் ஓரளவு அறிந்து வைத்திருந்தான். இருந்தாலும் தலை சுற்றல் மட்டும் இன்றும் குறையவில்லை. எப்பொழுதாவது மலர்விழியை சந்திப்பது தலை சுற்றலுக்கு மருந்திட்டது போல் இருக்கிறது. பள்ளியிலிருந்து நின்றிருந்த இந்த மூன்று மாதங்களில் மலர்விழியுடன் இரண்டு மூன்று முறை மட்டும் பேசியிருப்பான்.

கடன்களை எப்படி கொடுத்தும் அது குறைவது போல் தோன்றவில்லை. கொடுப்பதெல்லாம் வட்டியிலேயே கழிந்து கொண்டிருந்தது. சூசை கடலுக்கு போக ஆரம்பித்ததில் இருந்து டேவிட் சூசையுடன் நன்றாகப் பேசுவதில்லை. தன்னுடைய பேச்சை சூசை கேட்கவில்லை என்ற வருத்தத்தில் இருந்தார். சூசை அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளாமல் எப்பொழுதும் போல பேச முயற்சி செய்து கொண்டிருந்தான்.

அன்று வீட்டிற்கு வந்த டேவிட் மிக்க மகிழ்ச்சியுடன், "அத்தாச்சி ஒங்க தங்கச்சிக்கு தங்கிருச்சு. ரெம்ப நாளா நடக்கனும்னு நெனைச்சது, இப்பதான் நடந்துருக்கு"

"ரெம்ப நல்லதுங்க. மேரிய நல்லா பாத்துகுருங்க. ஒங்களுக்கு புள்ள பொறந்தா, கோயில்ல முடி எடுக்குரதா நேத்தி வச்சுருக்கேன். எல்லாம்

நல்ல படியா நடந்ததும், மொதப் பொறந்த நாளுக்கு முடி எடுத்துருவோம்".

"புள்ள மட்டும் நல்ல படியா பொறக்கட்டும். நீங்க என்ன சொன்னாலும் செய்றேன்".

"புள்ள நல்ல படியாதான் பொறக்கும். போற வழில கோயில்ல ஒரு பத்து ரூவா உண்டியல்ல போட்டுட்டு போங்க. ஏதாவது தேவனா, ஒடனே கூப்புடுங்க. நான் வந்துர்றேன்".

மேரி கருத்தரித்தது அங்கே எல்லோருக்கும் ஒரு இனிப்பான செய்தியாகவே இருந்தது. அதை நினைத்து எல்லோரும் மிக்க மகிழ்ச்சியுடன் இருந்தனர். சந்தோஷங்கள் தொடர்ச்சியாக வரும்பொழுது அது அவ்வளவாக இனிப்பதில்லை. எனவே சந்தோஷமான செய்திகள் எல்லாம் சோகமான நிகழ்ச்சிகள் முடிந்தவுடன் வந்து அதன் மதிப்பை உணர்த்துகின்றன. மேரி சந்தோஷத்தின் உச்சத்தில் இருந்தாள். கடைசியாகப் பார்த்த ஜோதிடருக்கு நன்றியைத் தெரிவித்துக் கொண்டு கொஞ்சம் அதிகமாக பணமும் கொடுத்தாள். மேரி செய்யும் எந்தவொரு வேலையையும் டேவிட் தடுக்கவில்லை.

ஜோதி அடிக்கடி டேவிட் வீட்டிற்கு சென்று மேரியை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று வந்தாள். அந்தோணி இறந்ததற்குப் பிறகு வெளியில் வராத ஜோதி மேரிக்காக அடிக்கடி அவர்கள் வீட்டிற்கு வந்து சென்றாள். டேவிட் மிகுந்த சந்தோஷத்தில் நடந்ததை மறந்து விட்டு திரும்பவும் சூசையிடம் நன்றாக பேச ஆரம்பித்தார்.

டேவிட் வீட்டிலிருக்கும் பொழுது சூசை அவர்களைப் பார்க்க வீட்டிற்கு வந்தான். வீட்டிற்குள் வந்து சித்தியிடம் நலம் விசாரித்து விட்டு வெளியில் வந்து திண்ணையில் அமர்ந்தான். டேவிட் ஏதோவொரு யோசனையில் இருப்பதைப் பார்த்த சூசை, "என்ன சித்தப்பா, ஏன் ஒரு மாதிரி இருக்கீக?"

"ஒன்னுமில்லடா, என்ன நடக்க போகுதுனே தெரில"

"என்ன ஆச்சுனு இப்ப இப்டி பேசுறீக? லாஞ்சில எதுவும் பிரச்சினையா?"

"அதுலாம் ஒன்னுமில்ல. எனக்கு இப்பவே முப்பத்தெட்டு வயசு ஆயிடுச்சு. இனிமே புள்ள பொறந்து அத எப்புடி வளக்குறது? நான் அதுக்குள்ள தளந்துடுவேன். அதான் யோசிச்சிட்டு இருக்கேன்".

மேரி கர்ப்பமானது தெரிந்தவுடன் சந்தோஷமாயிருந்த டேவிட், இப்பொழுது வருத்தமாயிருப்பது சூசைக்கு மன வேதனையைத் தந்தது.

எதையும் எதிர்கால சிந்தனையுடன் பார்த்தால் சந்தோஷத்துடன் ஏதோவொரு பய உணர்வும் எட்டிப் பார்க்கிறது. அந்த பய உணர்வு டேவிட்டையும் தொட்டுப் பார்த்தது. டேவிட்டிற்கு எதையாவது சொல்லி மனதைத் தேற்ற நினைத்த சூசை, "விடுங்க சித்தப்பா. தம்பியோ, தங்கச்சியோ நான் பாத்துக்க மாட்டனா என்ன?"

பள்ளியில் இருந்த பொழுது குழந்தை தனமாக இருந்த பேச்சு இப்பொழுது பெரிய மனிதர்களைப் போல மாறியிருந்தது. பழகும் ஆட்களும் அதற்கேற்ப சந்தர்ப்பங்களும் மனிதனை மாற்றுகின்றன.

அடுத்த நாள் சூசை கடலுக்குப் போய் விட்டு வரும்பொழுது செய்தி மிக வேகமாக பரவிக் கொண்டிருந்தது. முந்தின நாள் கடலுக்குச் சென்றவர்களில் 23 பேரை இலங்கை கடற்படை பிடித்துக் கொண்டு போனது. இந்தப் பிரச்சினையை தீர்த்து வைக்க எடுக்கப் படும் எந்தவொரு முடிவும் அந்த குடும்பங்களுக்கு எந்த விதமான நன்மையும் தராது என்று அவர்களுக்கு தெரிந்திருந்தது.

அந்த மீனவர்களை விடுவிக்கும் வரை யாரும் கடலுக்குச் செல்ல வேண்டாம் என்று முடிவு செய்து படகை யாரும் கடலுக்குச் செலுத்தவில்லை. இரண்டு வாரங்களாகியும் போராட்டம் நடத்தும் மீனவர்களுக்கு எந்தவொரு பதிலும் இல்லை. வழக்கம் போலவே இரண்டு வாரங்களுக்கு பிறகு அவர்கள் விடுவிக்க படுகிறார்கள் என்று தொலைக்காட்சிகளில் செய்தி வந்ததும் தொழிலுக்குச் செல்ல ஆரம்பித்தனர்.

அவர்களை இலங்கை கடற்படை பிடிப்பது என்பது வாரத்திற்கு ஒருமுறை வரும் விடுமுறை நாள் போல் ஆனது. தான் பிடிபடுவோம் என்று தெரிந்தே அவர்கள் கடலுக்குச் சென்று கொண்டிருந்தார்கள். சூசையின் படகில் வரும் ஒருவர் இன்று வரவில்லை. அதைப் பற்றி கவலைப்படாத சூசை படகை கடலுக்குச் செலுத்தினான். சூசை படகு வேலைகளைக் கற்றுக் கொண்டதால் அவனுக்கு ஒருவர் குறைவது ஒன்றும் பெரிதாகப் படவில்லை.

கடலுக்குச் சென்று குறிப்பிட்ட தூரம் வந்ததும் சூசை, "என்னண்ண, பாடு வச்சிரலாமா?"

"வச்சர்லாம் சூச, தூறுல சுருக்கு வையி. டே ராஜு போட்டு பலகாய ரெடியா வையி"

பலகையை தயார் செய்த ராஜு, "மனோ. எல்லாமே ரெடியா இருக்கு. தூற எலக்கு. சார்லசு, அந்த போட்டு பலகாய நீ எலக்கு. இத நா எலக்குறேன்".

சூசை மடியை எடுத்து கடலில் வீசியதும், மடி சிறிது நேரம் தண்ணீரில் மிதந்து கொஞ்சம் கொஞ்சமாக மூழ்கியது.

"டே ராஜு. போட்டு பலகய அவுத்து விடுடா"

ராஜு பலகையை அவிழ்த்து கடலில் விட்டு, "பலகாய எலக்கியாச்சு. கொஞ்ச நேரம் லாஞ்சிய ரன்னிங்க்ல விடு. பலகா அமப்புக்கு வரட்டும்"

படகு சிறிது தூரம் எஞ்சினில் ஓடியது. பலகையும் மடியும் ச¢யான அமைப்புக்கு வந்தன.

"சூச. வீஞ்சில இருந்து கம்பான எலக்குடா. நாப்பது பாவம் எலக்கு. இந்த தாவுக்கு நாப்பது பாவம் போதும்".

குறிப்பிட்ட அளவு கயிறு விட்டதும், திரும்பவும் படகை எஞ்சினில் ஓட விட்டனர். வேகமாக இல்லாமல் குறைந்த அளவு வேகத்திலேயே சென்றது. மடியை கடலில் விட்டதும், படகில் இருந்த கயிறு மடியை தன்னுடைய ஓட்டத்தில் இழுத்துக் கொண்டே வந்தது.

சிறிது நேரம் கழித்து, "மனோ. போட்டு லோடுல போற வர நான் அணியத்துப் பலகால தூங்குறேன். நீ வீலஸ்ல இருந்துக்க. ரெண்டு மணி நேரங்கழிச்சு எழுப்பு. பாடு புடிச்சுருலாம்" என்று சொல்லிவிட்டு ராஜு தூங்கப் போனான்.

"நா பாத்துக்கறேன். டே சூச. நீ வேணுனா வீலஸ்ல படுத்துக்க"

"இல்ல மனோண்ண. நா இப்ப தூங்கல. அடுத்த பாடு வைக்கிறப்ப நான் தூங்குறேன்"

படகு ஆழத்தில் இருக்கும் பொழுது இரண்டு மணி நேரமும் கொஞ்சம் கரையில் இழுக்கும் பொழுது ஒரு மணி நேரமும் மடி இழுத்து வருவார்கள். ஆழத்திற்கு ஏற்ப அவர்களின் நேரங்கள் கூடுதலாகவோ அல்லது குறைவாகவோ இருக்கும். மடியிழுத்து குறிப்பிட்ட நேரம் வந்ததும் மனோ ராஜுவையும் சார்லசையும் எழுப்பினான்.

"டே ராஜு, சார்லசு. எந்திரிங்கடா. பாடு வாங்கனும். எந்திரி. எந்திரி. சூச வீஞ்சிக்கு போடா".

படகின் பின்புறம் வந்த மனோ, "சூச, வீஞ்சில கியர போட்டு நீயும் சார்லசும் கம்பான வாங்குங்க".

மனோ கூறிய வேலையை முடித்ததும், "கம்பான வாங்கியாச்சு. வீஞ்ச டைட் பண்ணு"

"டைட் பண்ணிட்டேன். வேகமா வலய வாங்குங்க. தூறு வர வாங்குங்க"

கடல் அலைக்கு எதிராக மடியை இழுத்து படகிற்குள் போட்டுக்

கொண்டிருந்தனர். மடியின் கடைசிப் பகுதிக்கு வந்ததும் சார்லஸ், "தூறுல சீலிங்க் கயித்த வைச்சு சுருக்கு வையிங்கடா. வீஞ்சி கொடத்துல சுத்தி இழுங்க"

"மடி உள்ள வந்துருச்சு. தூறுல இருக்க சுருக்க உருவு".

மடியின் கடைசிப் பகுதியில் இருக்கும் சுருக்கை உருவியதும் மடிக்குள் இருந்த அனைத்தும் படகிற்குள் கொட்டியது. படகு இழுத்து வந்த பகுதியில் அனைத்தும் இப்பொழுது படகிற்குள் கிடந்தது. அவர்களின் இப்போதைய வேலை, எல்லாவற்றையும் பிரித்து தேவையில்லாததை கடலில் கொட்டிவிட்டு தேவையான இறால், கணவாய் மற்றும் மீன்களை மட்டும் பொறுக்கி வைத்துக் கொள்ள வேண்டியதுதான்.

## -அத்தியாயம் : 23-

சில மாதங்களுக்கு பிறகு மேரிக்கு குழந்தை பிறந்ததும், அதைப் பார்க்க சூசை மருத்துவமனைக்குச் சென்றான். பெண் குழந்தை பிறந்திருந்தது. மிக மிக சிறியதாக இருந்தது. பிறந்து சில மணி நேரங்களே ஆன குழந்தையை முதன்முறையாக சூசை பார்க்கிறான். அவன் கூட குழந்தையாகிக் கொஞ்சும் மனநிலையில் இருந்தான். ஆனாலும், தான் வளர்ந்து விட்டதால் அவ்வாறு குழந்தை தனமாக நடந்து கொள்ளக் கூடாது என்று கட்டுப் படுத்திக் கொண்டு இருந்தான்.

வீட்டிற்கு வந்ததும் ஜோதி, "என்னடா? ஒந்தங்கச்சிய பாத்தியா?நல்ல கலரா இருக்காடா. ஒன்ன விட கலரா வருவானு நெனைக்கிறேன்"

"பாத்தேம்மா. ஆபரேசன் பண்ணாகளாமே?"

"ஆமாடா. தல திரும்பலயாம். ஒன்னும் பண்ண முடியாம கத்தி வச்சுதான் பெரசவம் பண்ண வேண்டியதாப் போச்சு. ஒன் சித்தியும் வலு கொறஞ்சவதான். அதான் ரெம்ப பயந்துட்டா. நாங்கதான் அதுலாம் ஒன்னும் ஆகாதுனு சொல்லி ஆபரேசனுக்கு சரின்னு சொல்ல வச்சோம். எல்லாம் நல்ல படியா நடந்ததே போதும். நான் இப்ப ஆஸ்பத்திரிக்கு தான் போறேன். சோறு போட்டு சாப்டுக்க. தாத்தா வந்தொடன சோறு போட்டுக் குடு."

ஜோதி சாப்பாட்டை எடுத்துக் கொண்டு மருத்துவமனைக்குச் சென்றதும், சாப்பிட்டு விட்டு சூசை படுத்துக் கொண்டான். கடலுக்குச் செல்ல ஆரம்பித்ததிலிருந்து நேரம் கிடைக்கும் போதெல்லாம் தூங்க ஆரம்பித்திருந்தான். கடலுக்குச் செல்லும் போது இரவு நேரங்களில் விழித்திருக்க வேண்டியிருப்பதால், கடலுக்குச் சென்று விட்டு வந்ததும் அடுத்த நாள் முழுவதும் தூங்குகிறான்.

அடுத்த நாள் வழக்கம் போல் கடலுக்குச் சென்றனர். இரவு நேரத்தில் ஏதோவொரு அசம்பாவிதத்தை இவர்களால் உணர முடிந்தது. நடுக்கடலில் ஆங்காங்கே வலையிழுத்துக் கொண்டிருந்த படகுகள் ஒருசேர இவர்களை நோக்கி வருவது போல் இருந்தது. சூசையின் படகிலும் இழுத்துக் கொண்டிருந்த வலைகளை உள்ளே இழுத்துப் போட்டுக்கொண்டு கிளம்ப தயாராகினர். எல்லாப் படகுகளும் வேகமாக வருவதைப் பார்த்து இவர்களும் எல்லாப் படகுகளும் செல்லும் திசையை நோக்கி வேகமாகச் சென்றனர். பின்னால் இலங்கை கடற்படை கப்பல் விரட்டி வருவதை இவர்களால் பார்க்க முடிந்தது. இவரகளும் வேகமாகச் சென்று கச்சத்தீவு அருகே இலங்கை கடற்படை யின் கப்பல் வர

முடியாத அளவு கரைக்குச் சென்று விட்டனர்.

எல்லாப் படகுகளும் கொஞ்ச நேரம் நங்கூரமிட்டு கிடந்தன. சூசையின் படகை அருகிலிருந்த இன்னொரு படகிற்கு அருகில் கொண்டு சென்று என்ன நடந்தது என்று விசாரித்தனர்.

"அண்ணே. என்னண்ணே ஆச்சு? ஏதாவது பெரிய பிரச்சின ஆச்சா?" என்று சூசை பக்கத்து படகில் இருந்தவரிடம் விசாரித்தான்.

"ஆமாப்பா. எப்பயும் புடிச்சிட்டு போறவனுங்க இன்னைக்கு சுட ஆரம்பிச்சுட்டாய்ங்க. வலயிழுத்துக்கிட்டு இருந்தப்ப, என் போட்டுக்கு பக்கத்துல இருந்த போட்ட சுட்டுட்டாய்ங்க. அதான் வேகமா கௌம்பிட்டோம். அந்த போட்ல இருந்தவங்களும் கௌம்புனாங்க. ஆனா எங்க கௌம்புனாங்கன்னு தெரியல."

இவர்கள் பேசிக்கொண்டிருந்த அதே நேரம் இலங்கை கடற்படை துப்பாக்கியால் சுடப்பட்ட படகு கடற்கரையை நோக்கி மிக வேகமாக சென்று கொண்டிருந்தது. காற்றை விட வேகமாக கரைக்கு சென்று விட வேண்டும் என்ற எண்ணத்துடன் அந்தப் படகு அலைகளை குத்திக் கிழித்துக் கொண்டு சென்றது. கரைக்கு வந்ததும் மார்பில் குண்டடி பட்டு நினைவிழந்திருந்த கண்ணனையும், தோள்பட்டையில் குண்டடி பட்டிருந்த அல்போன்சையும் மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றனர்.

மார்பில் குண்டடி பட்டு நினைவிழந்திருந்த கண்ணன் இறந்து விட்டான் என்று கணிக்க மருத்துவருக்கு அதிக நேரம் எடுத்துக் கொள்ளவில்லை. அல்போன்சை மருத்துவ மனையில் அனுமதித்து விட்டு கண்ணன் இறந்து விட்டதை அவர்களுக்கு தெரிவித்தனர். கூட வந்திருந்தவர்களுக்குத் தெரிந்திருந்தாலும், கண்ணனைப் பிழைக்க வைத்துவிட வேண்டும் என்ற எண்ணமே அவர்களை கண்ணன் மயக்கத்தில் இருப்பதாக நினைத்துக் கொள்ளச் செய்தது. ஆனாலும் அவர்களின் நம்பிக்கை பொய்த்தே போனது.

அடுத்தநாள் படகுகள் கரைக்கு வந்ததுமே அனைவருக்கும் விஷயம் தெரியவந்தது. அவர்களால் ஒன்றும் செய்ய முடியாதே! அதிகபட்சம் போனால் வேலைநிறுத்தம் செய்யலாம். தாங்கள் செய்யும் எந்த வேலை நிறுத்தமும் இலங்கை கடற்படைக்கு எந்தவொரு பாதிப்பையும் தந்துவிடாது என்று அவர்களுக்கு நன்றாகவே தெரிந்தது.

கண்ணன் ஏற்கெனவே ஒரு முறை இலங்கைக் கடற்படையால் பிடிக்கப்பட்டு ஒரு மாதத்திற்கு பிறகு விடுதலை செய்யப் பட்டவன். அதற்குப் பிறகும் கடலுக்குச் சென்று வந்தான். அவனுக்கு திருமணம் நிச்சயம் செய்யப் பட்டிருந்தது. கண்ணன் பள்ளிப் படிப்பை

பாதியிலேயே நிறுத்தி விட்டிருந்தான். கண்ணனின் இறுதிச் சடங்குகள் முடிந்ததும், எல்லா மீனவர்களும் சென்று வழக்கம் போலவே மனு குடுக்கச் சென்றனர். இது அவர்களுக்குப் பழகிப் போயிருந்தாலும் இந்த முறையாவது ஏதாவது நன்மை நடந்துவிடாதா என்ற ஏக்கம் அவர்களுக்குள் இருந்தது.

கண்ணனின் இறப்பிற்கு இரங்கல் தெரிவித்தும் இலங்கைக் கடற்படையைக் கண்டித்தும் ஏராளமான அமைப்புகள் சுவரொட்டிகளை ஆங்காங்கே ஒட்டியிருந்தனர். அந்த மீனவர்களுக்கு திரும்பவும் பயம் வந்து ஒட்டிக் கொண்டது. ஆனால் அந்த பயம் அவர்களை கடலுக்குச் செல்லாமல் தடுக்க முடியவில்லை. படகைத் தொடும் எவரும் பயத்தை உணர்ந்த பின்னரே படகிற்குள் செல்ல முடிந்தது. மீனவர்கள் விரிக்கும் வலை போலவே இலங்கைக் கடற்படை வலை விரித்து தயாராக காத்துக் கொண்டு இருக்கிறது. அந்த வலையில் விழாமல் இவர்கள் ஓடிக் கொண்டே இருக்க வேண்டும். வலையில் விழும் எவரும் நேரடியாகவோ மறைமுகமாகவோ மிகப் பெரிய இழப்புகளை சந்தித்துதான் ஆக வேண்டும்.

கண்ணன் குடும்பத்திற்கு அரசியல் கட்சியை சேர்ந்தவர்கள் ஆறுதல் சொல்லிச் சென்றனர். எந்தவொரு ஆறுதலும் அவர்களை ஆற்றுப் படுத்துவதாய் இல்லை. அரசாங்கம் வழங்கிய நிவாரண நிதி உதவியாய் இருக்கும் என்று நினைத்தாலும், கடனில் பாதியும் கல்லறை கட்டவும் மட்டுமே போதுமானதாக இருந்தது. அல்போன்சுக்கு கொடுக்கப் பட்ட நிவாரணம் அவனை விசாரிக்க வந்தவர்களை கவனிக்கவும், மருத்துவச் செலவுகளுக்குமே போதுமானதாக இருந்தது. அந்த நிகழ்ச்சியை விவரிக்கும் பொழுது அல்போன்சுக்கு அவனை அறியாமலேயே முகம் வியர்க்க ஆரம்பித்தது. மூச்சு வாங்கியது.

இலங்கை கடற்படை மீதிருந்த பயம் திரும்பவும் சூசையிடம் வந்து ஒட்டிக் கொண்டது. திரும்பவும் பள்ளிக்குச் சென்று விடலாமா என்று யோசித்தான். ஆனால் அப்பொழுது கச்சத்தீவு அவன் தொடும் தூரத்திலும் பள்ளிக்கூடம் அவனுக்கு எட்டாத தூரத்திலும் இருந்தது.

## -அத்தியாயம் : 24-

அந்த வருடத்தின் ஒன்றரை மாத வேலை நிறுத்தம் ஆரம்பித்திருந்தது. ஏப்ரல் மற்றும் மே மாதங்களில் இறால் இனப்பெருக்கம் செய்வதால், அந்த 45 நாட்கள் வேலைக்குச் செல்லாமல், மே மாத இறுதியிலோ அல்லது ஜூன் மாத ஆரம்பத்திலிருந்தோ கடலுக்குச் செல்வது வழக்கம். அந்த வருடமும் அதைப் போலவே வேலை நிறுத்தம் ஆரம்பித்திருந்தது. சூசைக்கு மிக நிம்மதியாக இருந்தது. இலங்கை கடற்படை பயம் இல்லாமல் அந்த நாட்களை கடத்தலாம் என்பதே மிகுந்த நிம்மதியாகப் பட்டது. இந்த நாற்பத்தைந்து நாட்களையும் படகுக்கு தேவையான எல்லா வேலைகளையும் செய்வதற்கு உபயோகப் படுத்திக் கொண்டனர். எனவே கடன் வாங்க ஆட்களைத் தேடி ஓட வேண்டி இருந்தது. வட்டியும் அதிகமாகவே இருந்தது. இருந்தாலும் வேறு வழி இல்லாமல் கிடைத்த பணத்தை வாங்கி படகு வேலையை ஆரம்பித்திருந்தனர். சூசையின் தாத்தா திரும்பவும் ராசாவிடமே பணம் கேட்டார்.

"போன தடவ வாங்குனதே இன்னும் கட்டி முடிக்கலயே. அது அப்டியேதான் இருக்கு. அம்பதாயிரந்தான கொறஞ்சிருக்கு".

" சரி தானப்பா. இருந்தாலும் சூச இப்ப கடலுக்கு போறான்ல. சம்பளக் காசு மிச்சமாகுதுல. தாராளமா குடுத்துடுவாங்க".

இன்னும் பலவாறாக பேசி ராசாவிடம் ஐம்பதாயிரம் வாங்கி படகு வேலையை ஆரம்பித்தனர். சூசை கடலுக்குச் செல்ல ஆரம்பித்து பல மாதங்கள் ஓடியிருந்தது. அவனுடைய உடலளவில் அதிகப் படியான மாற்றம் இல்லையென்றாலும், அவனது உள்ளத்தளவில் ஏற்பட்ட மாற்றம் அவனைக் கொஞ்சம் பெரியவனாக காட்டிக் கொண்டிருந்தது. ஆனாலும் மலர்விழியை பார்க்கும் பொழுது அந்த பழைய சூசையாகவே இருந்தான். மனதில் ஏற்படும் பயம் கொஞ்சம் கூட குறைந்ததாக தெரியவில்லை. அவளாக எதுவும் பேசினால் அதற்கு மட்டும் பதில் சொல்கிறான். இருந்தாலும் இன்னும் கொஞ்ச நேரம் பேசியிருக்கலாம் என்று ஏங்கிக் கொள்கிறான்.

இந்த நாற்பத்தைந்து நாட்களில் கடல் தொழிலைத் தவிர அதைச் சார்ந்த அனைத்துத் தொழில்களும் கொஞ்சம் நல்ல நிலையிலேயே இருந்தன. வட்டிக்குப் பணம் விடுபவர்கள், படகுக்கு தேவையான பொருட்களை விற்பவர்கள் மற்றும் மதுக் கடைகள் அனைத்தும் எல்லா நாட்களிலுமே நல்ல படியாக போய்க் கொண்டிருந்தன. மற்ற மாதங்களில் கடலிலிருந்து திரும்பும் நாட்களில் மட்டுமே நல்ல வருமானம் இருக்கும். ஆனால் இந்த வேலை நிறுத்த நாட்களில் எல்லா நாட்களிலும்

வருமானம் அதிகமாகவே இருந்தது.

டேவிட் மகள் விக்டோரியாவிற்கு மொட்டை போட வேண்டும் என்று ஜோதி சொல்லியிருந்த நேர்த்திக் கடனை இந்த வேலை நிறுத்த நாட்களில் போட்டுக் கொள்ளலாம் என்று முடிவு எடுத்து இருந்தனர். அவர்கள் கிறிஸ்தவர்களாக இருந்த போதும் குழந்தையின் நலனை நினைத்தும், அண்ணியின் பேச்சை மீற முடியாமலும் முனியய்யா கோவிலில் மொட்டை போட்டனர். சூசை புதுத் துணி எடுத்து வந்து தனது தங்கைக்கு அணிவித்தான். அன்று அனைவரும் டேவிட் வீட்டிலேயே சாப்பாட்டை முடித்துக் கொண்டு அங்கேயே உறங்கி விட்டிருந்தனர்.

சூசையின் தாத்தா படகிற்கு தேவையான எல்லா வேலைகளையும் ஆட்களை வைத்து செய்து கொண்டிருந்தார். படகு வேலைகள் அனைத்தையும் முடித்ததும் இனிமேல் படகிற்கு எந்தவொரு வேலையும் வராது என்றும், கடன் எல்லாவற்றையும் கட்டி விடலாம் என்றும், எல்லா வருடமும் நினைப்பது போலவே இந்த வருடமும் நினைத்துக் கொண்டார். ஒரு வழியாக எல்லா வேலைகளும் முடிந்து படகு தயார் ஆனதும், அந்த நாற்பத்தைந்து நாள் முடிந்தது. எல்லாரும் ஆர்வத்துடன் கடலுக்குக் கிளம்ப தயாராயினர்.

கடலுக்குச் சென்று விட்டு சூசை வந்து கொண்டிருந்தான். சூசை மலர்விழியைப் பார்த்ததும் ஒரு ஓரத்தில் நின்றான். மலர்விழியும் அவன் அருகில் சென்று, "என்ன சூச. தொழிலு எப்புடி போகுது?" என்று கேட்டாள்.

"பரவால்ல. இப்பதான ஸ்ட்ரைக் முடிஞ்சு போறோம். அதுனால நல்லாவே போயிட்டிருக்கு. நீ எப்புடி இருக்க? பாக்கவே முடியல!"

"நான் நல்லாதான் இருக்கென். வீட்லயே இருக்கென். எப்பவாச்சும் கடைக்கு போகனும்னா மட்டும் வர்றது. அவ்வளவுதான். அதான் பாக்க முடியல".

என்றுமில்லாமல் அன்று மட்டும் கூடுதலாக கொஞ்ச நேரம் அவர்கள் பேசிக் கொண்டிருந்தனர். சூசையைப் போலவே கடலிலிருந்து திரும்பிய நாராயணன், அவர்கள் பேசுவதைப் பார்த்து விட்டு வீட்டை நோக்கி நடந்தார். ஏதோ நினைத்த நாராயணன் திரும்பவும் வீட்டிலிருந்து வெளியில் வந்து சூசையும் மலர்விழியும் பேசிக் கொண்டிருந்த வழியில் நடந்து வந்தார்.

அந்த நேரமே மலர்விழியும் சூசையும் பேசி முடித்து விட்டு திரும்பினர். நாராயணன் நேரே வீட்டிற்கு திரும்பி விட்டார். மலர்விழி கடைக்கு போய்விட்டு வீட்டுக்கு திரும்பினாள். திண்ணையில் அமர்ந்திருந்த

நாராயணன் வீட்டிற்குள் வந்த மலர்விழியை கன்னத்தில் தன் பலம் முழுவதையும் சேர்த்து அறைந்தார்.

“என்னை ஏம்பா அடிக்குறீக?"

"ம்ம். கடைக்கு போய்ட்டு வர்ற நேரமா இது? கடலுக்குப் போய்ட்டு வர்ற மனுசன் எவ்வளவு நேரந்தா வீட்ல சும்மா உக்காந்துருக்கது? பசிக்காதா எனக்கு?"

"கடைல கூட்டமா இருந்துச்சு. அதான் வர நேரமாயிடுச்சு", என்று சொல்லிவிட்டு அடுப்படிக்குள் நுழைந்து சத்யாவிடம் கடையில் வாங்கி வந்திருந்த பொருட்களைக் கொடுத்தாள்.

பொருட்களை வாங்கிக் கொண்ட சத்யா, "ஒங்கப்பாவுக்கு என்ன ஆச்சாம்? பத்து நிமிசத்துல ஒங்க அப்பாவுக்கு என்ன ஆயிடுமாம்?"

"என்னனு தெரில. கடைல கூட்டமா இருந்துச்சு. அதான் அஞ்சு பத்து நிமிசம் லேட் ஆகிடுச்சு. இதுக்கு எதுக்கு இப்டி கோவப் படுறாருனு தெரில".

அன்று இரவு மலர்விழி தூங்கியதும் நாராயணன் சத்யாவை தனியாக எழுப்பிக் கொண்டு வந்து, "இன்னைக்கி காலைல ஒம்பொண்ணு அந்த அந்தோணி மவன் சூச கூட நின்னு பேசிக்கிட்டுருக்கா."

"அவ கூட படிச்ச பையன், ஏதாவது பேசணும்னு பேசிருப்பா. மத்தபடி ஏதும் இருக்காதுங்க".

"நீ வேற. அவ்ளோ நேரம் என்ன பேச்சு வேண்டிருக்கு. நான் போறதப் பாத்துட்டு தான் ரெண்டு பேரும் பேசுறத நிப்பாட்டுனாக. அப்டி என்ன பேசுறாகனு கேக்குறேன்?"

"சரி விடுங்க. அதப் பத்தி நான் கேக்குற மாதிரி கேட்டுக்கறேன். நீங்க சத்தம் போட்டு இதப் பத்தி எதுவும் அவ கிட்ட கேக்க வேணாம்" சத்யாவிற்கு நாராயணனின் கோபத்தை அதிகப்படுத்தி விடக் கூடாது என்ற எண்ணமே அதிகமாயிருந்தது. எனவே அவரை அமைதிப் படுத்தும் விதமாகவே பேசினாள். அடுத்த நாள் காலை எழுந்ததும் அதைப் பற்றி எப்படியும் பேச வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள்.

காலை எழுந்து சிறிதுநேரம் கழித்து சத்யா மலர்விழியிடம், "ஏண்டி, நேத்து அந்த சூச கூட ரெம்ப நேரம் பேசிட்டுருந்தியாமே. ஒன் அப்பா வந்ததுந்தான் ரெண்டு பேரும் பேச்சை நிப்பாட்டிட்டு வந்தீங்களாம்."

இதுதான் நேற்று அப்பா தன்னை அடித்ததற்கான காரணம் என்று நினைத்த மலர்விழி, எங்கிருந்து அவர் தன்னை பார்த்திருப்பார் என்று யோசித்துக் கொண்டே, "அட என்னம்மா நீ, சூச வந்தோடன எப்புடி

இருக்க? தொழிலு எப்புடி இருக்குனு மட்டுந்தான் கேட்டேன். அப்பறமா கெளம்பி வந்துட்டேன். அவரு சொல்ற மாதிரி அவரு வந்ததக் கூட நான் பாக்கல.. அப்டி இருந்தாலும் எப்பவும் வர்ற நேரத்துலதான வந்தேன். அப்பறம் எதுக்கு ரெம்ப நேரம் பேசுனேன்னு சொல்றாரு?"

"சரி விடு. அவரு ஒரு கோவக்காரரு. எதுக்கு கோவப்படணும், எப்புடி கோவப்படணும்னு கூட தெரியாது. நீ பாட்டுக்கு ஒன் வேலைய பாரு." என்று சொல்லிவிட்டு அமைதியானாள். மலர்விழியை அமைதிப் படுத்தினாலும், சத்யா மனதிற்குள் ஒரு சஞ்சலம் இருந்துகொண்டே இருந்தது.

அந்த நிகழ்ச்சிக்குப் பின்னர், நாராயணன் சூசையைப் பார்க்கும் பார்வையில் ஒரு வகை எரிச்சல் இருந்தது. அது சூசைக்குத் தெரியவில்லை. வழக்கம் போல மலர்விழியுடன் பேசும் அடுத்த சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து மனத்தளவில் காத்திருந்தான். மலர்விழியோ, இனிமேல் வெளியிலே எங்கும் சூசையை சந்தித்துப் பேசக்கூடாது அல்லது நாராயணன் அந்த சுற்று வட்டாரத்திலேயே இல்லை என்று தெரிந்தால் மட்டுமே அவனைச் சந்திக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள்.

## -அத்தியாயம் : 25-

சத்யாவிற்கு எப்பொழுது அந்த எண்ணம் வந்தது என்று தெரியவில்லை. இருந்தாலும் நாராயணனிடம் சொல்லி விட வேண்டும் என்று காத்துக் கொண்டிருந்தாள். அன்று வீட்டில் செய்த பலகாரத்தை மலர்விழியிடம் கொடுத்து அவளுடைய தாத்தா வீட்டில் கொண்டு போய் கொடுக்குமாறு அனுப்பி வைத்தாள்.

மலர்விழி சென்றதும் நாராயணனிடம், "என்னங்க. ஒங்களோட போட்டுல கடலுக்கு வர்ற ராமுவ நம்ம மலருக்கு கல்யாணம் பண்ணி வச்சா என்ன.”

"என்னடி, திடீர்னு இப்டி சொல்லுற?. காசு என்ன வச்சிருக்கோம்? அப்பறம் கல்யாணத்துக்கு இப்ப என்ன அவசரம் வேண்டி கெடக்கு?"

"என்ன இருந்தாலும் மலருக்கும் பதினெட்டு வயசு ஆயிடுச்சு. எப்புடியும் பண்ணிதான ஆகனும்? நீங்களும் நானும் கொழப்பத்துலயே இருந்தா எப்டி?”

“அதுவுஞ்சரிதான். ஆனா காசுக்குதான் என்ன பண்றதுனு தெரியல". ஏதோ ஒரு புதிய பொறுப்பை ஏற்றுக் கொண்டதைப்போல நாராயணன் காணப்பட்டார். அவருக்கு அந்தப் பொறுப்பை விட பணத்தேவையே பெருஞ்சுமையாகத் தெரிந்தது. எப்படி சமாளிக்கப் போகிறோம் என்ற குழப்பத்துடனே இருந்தார். மலர்விழி அவளது தாத்தா வீட்டிலிருந்து வந்ததும் அவர்கள் இருவரும் அமைதியாக இருந்தது அவளுக்கு ஏதோ ஒரு இனம் புரியாத பயத்தையே உண்டு பண்ணியது. இருந்தாலும் அவர்கள் திருமணத்தைப் பற்றி பேசியிருப்பார்கள் என்று அவள் கொஞ்சம் கூட நினைத்துப் பார்க்கவில்லை.

அடுத்தடுத்து இரண்டுமுறை மலர்விழியை சந்தித்தும் அவள் சூசையுடன் பேசவில்லை. பார்த்தும் பார்க்காதது போலவே அவனைக் கடந்து சென்றாள். சூசைக்கு அவளுடன் பேச வேண்டும் என்ற எண்ணம் இருந்தாலும், வழக்கம் போலவே அவனுடைய தயக்கம் அவனை தடுத்தது. அன்று அவளுக்காகக் காத்திருந்து வெறுப்புடன் வீடு திரும்பியபோது, ராசா, தாத்தா மற்றும் டேவிட் மூவரும் வாசலிலே நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். ராசா கடனைக் கேட்கத்தான் வந்திருப்பார் என்று நினைத்தான். ஆனால், அவர்களின் பேச்சு வேறு காரியமாக இருந்தது.

டேவிட், "இல்ல ராசா. அது ஒன்ன வச்சுதான் இந்த குடும்பமே ஓடிட்டுருக்கு"

"அது சரிதான். நல்ல வெலைக்கு தான் கேக்குறாக. குடுத்துட்டு வேற போட்டு வாங்கலாமுல்ல. இல்லனா சம்பளத்துக்கு போலாம்ல"

சூசையின் தாத்தா, "நீ சொல்றது சரிதாம்ப்பா. ஆனா இவ்வளவு நாளு சொந்த போட்டுல போயிட்டு, திடீர்னு சம்பளத்துக்கு போறது நல்லா இருக்காதுப்பா"

ராசா அவர்களின் படகை யாருக்கோ விற்க வந்திருக்கிறார் என்று சூசைக்கு தெரிந்தது. இன்னும் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு ராசா, "சரி. முடிவு பண்ணிச் சொல்லுங்க. ரெம்ப நாளு காத்துருக்க மாட்டாக" என்று சொல்லிச் சென்றார்.

ராசா சென்றதும் டேவிட், "நல்ல பய. மொத்தமா அவன் காச வாங்கிடலாம்னு பாக்குறான்"

சூசையின் தாத்தா, "ஆமா, அஞ்சு லச்சத்துக்கு போட்ட கேக்குறான். அவன் காசு மட்டுமே நால்ரை இல்லனா நாலே முக்கா லச்சம்னு சொல்லுவான். அப்பறம் நம்ம கிட்ட காசும் இருக்காது, போட்டும் இருக்காது. ஏதாவது தேவனா என்ன பண்றது?"

"போட்ட யாரு தாத்தா கேக்குறது?"

"யாரு கேக்குறது? நம்ம போட்ட விக்கிறதுக்கு ரெடியா இருக்கமானு கேட்டுட்டு, நம்ம ரெடியா இருந்தா யாராவது ஒருத்தங்கிட்ட தள்ளி விடுவான். அவனுக்கு தேவ காசுதான"

"அது சரி, இப்ப அவருக்கு மாசா மாசம் சரியாதான குடுக்குறோம். அப்பறம் என்ன?"

"சரியாதான் குடுக்குறோம். எதாவது ஒரு மாசம் கொறயுதாம். அதுனால அவனுக்கு மொத்தமா வேணுமாம்"

பலவாறாக பேசிக் கொண்டிருந்துவிட்டு படகை விற்க வேண்டாம் என்ற முடிவுக்கு அவர்கள் வந்தனர். சூசையுடன் அவர்கள் கலந்தாலோசிக்கவில்லை என்றாலும் சூசைக்கு அவர்கள் எடுத்த முடிவு சரி என்றே பட்டது. பிறகு டேவிட் அவர் வீட்டுக்கு கிளம்பிச் சென்றார். அன்று இரவு அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் பொழுது ஜோதி, "ஏன்டா சூச. ஒங்கூட படிச்ச மலருக்கு மாப்ள பாக்குறாங்குளாம்ல"

"தெரியலயேமா. எங்கிட்ட மலரு எதுவும் சொல்லலயே", என்று சொல்லிவிட்டு அதனால்தான் மலர்விழி தன்னோடு இந்த நாட்களில் பேசாமலிருக்கிறாளோ என்று நினைத்துக் கொண்டு பிறகு, "யாருமா மாப்ள?" என்றான் மெதுவாக.

"அவ அப்பா கூட போட்ல கடலுக்கு போறான்ல, ராமு. அவனதான் கேட்டுருக்காங்களாம். ஆனா இன்னும் முடிவாகல"

இதைக் கேட்டதும், யாரந்த ராமு என்று சூசை கொஞ்சநேரம் யோசித்தான். நாராயணனுடன் தான் பார்த்த பலரையும் நினைத்து, அவர்களாக இருக்குமோ அல்லது வேறு ஒருவராக இருக்குமோ என்று தன்னைத் தானே குழப்பிக் கொண்டிருந்தான். அவனால் அன்று முழுவதும் நிம்மதியாக உறங்க முடியவில்லை. தான் நினைத்தது போல் மலர்விழி நினைக்கவில்லையோ என்று யோசித்தான், ஒரு வேளை மலர்விழியை திருமணத்திற்கு கட்டாயப் படுத்துகின்றனரோ என்று எண்ணிக் கொண்டான். அவனுடைய நினைவும் கனவும் ஒன்றைப்பற்றியே இருந்தன அந்த இரவு முழுவதும்.

## -அத்தியாயம் : 26-

அடுத்த நாட்களில் மலர்விழிக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. தான் அன்று சூசையுடன் பேசிக் கொண்டிருந்ததே இவ்வளவு வேகத்திற்கும் காரணம் என்று நினைத்துக் கொண்டாள்.அவளிடம் திருமணத்தைப் பற்றி ஒரு வார்த்தை கூட கேட்காமல் திருமண வேலைகள் நடந்து கொண்டிருந்தன. அவளால் அதை எதிர்த்து ஒன்றும் செய்ய முடியவில்லை. அன்று அவளை பெண் பார்க்க வந்த நேரங்களில் கூட அவளால் சிரிக்க முடியாமலும் அருகில் இருந்தவர்கள் பேசும் போது சிரிக்க வேண்டும் என்ற கட்டாயத்திலும் சிரிக்க முயற்சி செய்து சிரித்தாள். பெண் பார்க்க வந்திருந்தவர்களுக்கு பெண் பிடித்திருக்கிறது என்று கூறியதும் நிச்சயத்திற்கான தேதியை குறித்துக் கொண்டனர். மலர்விழிக்கு இது எல்லாம் கனவில் நடப்பது போல தோன்றியது.

அன்று இரவில் நாராயணன், "மலர அவுங்களுக்கு புடிச்சு போச்சு. நக பணம் எவ்ளோ எதிர் பாப்பாங்கன்னு தெரில"

"அதான் நம்ம விருப்பம்னு சொல்லிட்டாங்கள்ள. நம்மளால எவ்ளோ முடியுமோ அதப் பண்ணுவோம்"

"நம்மளால முடிஞ்சத பண்ணனும்னாலும், கொறஞ்சது பத்து பவுனாச்சும் போட வேணாமா?"

"பாப்போம். எந்தம்பி தாய்மாமன் மொறைக்கி என்ன போடுறான்னு கேக்குறேன். மிச்சத்த நம்ம பாத்துக்குருவோம்"

"ஒந்தம்பிகிட்ட வாங்குனா நல்லா இருக்குமா? அவைங்கள நம்பிதான் எம்பொண்ணுக்கு கல்யாணம் பண்ணனுமா?" வழக்கம் போல சத்யா வீட்டைப் பற்றி பேச ஆரம்பித்ததும் எரிச்சல் பட ஆரம்பித்தார். ஆனாலும் அந்த சூழ்நிலை அவரை முழுமையாக எதிர்க்க தோன்றவில்லை.

"நீங்க இதுக்குலா பேச வேணாங்க. நம்ம என்ன கடனா கேக்குறோம். அவன் மொறயதான பண்ண சொல்றோம். அதுவும் கட்டாயப் படுத்தி போட சொல்லல. அஞ்சு பவுனு போட்டா பத்தாதா?"

"ஆமா, ஒந்தம்பி அஞ்சு பவுனு போட்டுட்டுதான் மறு வேல பாப்பான். ரெண்டு பவுனு கூட போட மாட்டான்"

"விடுங்க. நா பேசிக்கிறேன். பேசிட்டு வந்து ஒங்ககிட்ட சொல்லுறேன்" என்று சொல்லிவிட்டு திரும்பி படுத்துக் கொண்டாள். அதற்கு மேல் பேச வேண்டாம் என்பது போல் இருந்தது. அடுத்த நாள் காலை சத்யா தனது தந்தை வீட்டுக்கு சென்று மலர் கல்யாணம் பற்றிய பேச்சை ஆரம்பித்தாள்.

"அப்பா மலரு கல்யாணத்துக்கு என்ன பண்ணலாம்னு இருக்கீக?"

"என்னம்மா பண்ணனும்னு நெனைக்குற? எங்களால முடிஞ்சத பண்றோம். ஒன் வீட்டுக்காரரு என்ன கேக்குறாரு?"

"அவரு எங்க கேக்குறாரு? நாந்தான் ஒங்ககிட்ட பேசிட்டு சொல்றேன்னு சொன்னேன். பத்து பவுனு போடலாம்னு பேசுனோம். நீங்க என்ன சொல்றீங்க?"

"பத்து பவுனு முடியுமா? அப்பறம் துணிச் செலவு, அது இதுனு ஏகப்பட்ட செலவு இருக்கே"

"அது சரிதாம்பா. ஆனா இப்ப இருக்க நெலமல பத்து பவுனாச்சும் போடலனா, மலரு போற எடத்துல எதுவும் சொல்லுவாகளே, அதுனாலதான் பாக்குறேன்"

"சரிம்மா, இப்ப நீ எங்கள்ட்ட என்ன எதிர்பாக்குற?"

"அஞ்சாறு பவுனு போட்டீகன்னா நல்லா இருக்கும். அப்பதான எங்களுக்கும் செலவு கொறயும்"

"அம்மாடி. அஞ்சாறு பவுன்லாம் இப்ப போட முடியாதுமா. ஏற்கனவே பெரிய கஸ்டத்துல இருக்கோம். எங்களால அவ்ளோ செலவு பண்ணி நக எடுத்துப் போட முடியாதுமா"

"அப்பா, அவரு ஏற்கனவே ரெம்ப கோவத்துல இருக்காரு, இந்த தடவ நீங்க அஞ்சு பவுனாச்சும் போடலனா, என்ன ஒரு பாடு படுத்திருவாரு"

"இப்டி சொன்னா என்ன பண்றது? சரி, எதுக்கும் ஒந்தம்பிகிட்ட கேட்டுட்டு சொல்றேன்".

"அப்பா. கேட்டுட்டு அஞ்சாறு பவுனு போட பாருங்க. அதுக்கும் கம்மியா போட்டா மலருக்கும் கல்யாணமாகாது, நானும் உங்க கூட வந்து இருக்க வேண்டியதுதான்" என்று சொல்லிவிட்டு வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

சத்யாவின் தந்தைக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. வீட்டில் இருக்கும் நகையை மொத்தமாக அடமானம் வைத்தாலும் இரண்டு பவுன் மட்டுமே அவர்களால் புது நகை எடுக்க முடியும். மற்றவற்றிற்கு என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டே இருந்தார்.

தனது தந்தையிடம் பேசிவிட்டு வந்த சத்யா நாராயணனிடம், "எங்கப்பாட்ட சொல்லிட்டேன், அஞ்சு பவுனாச்சும் போடனும்னு. இனிமே அது அவுக பாடு. மத்தது என்ன செலவு இருக்குனு பாருங்க".

"எப்ப தருவாங்களாம்? கல்யாணத்துக்கு முன்னாலயே தரச் சொல்லு. கல்யாணத்தன்னைக்கு வந்து தர வேணாம்னு சொல்லு. இதுலாம்

தெளிவா சொல்லிடு. அன்னைய்க்கு வந்து போட்டா, ஒந்தம்பி போட்டதுனு தான ஊருக்காரன் சொல்லுவான்".

"அதுலாம் நீங்க ஒன்னும் நெனைக்க வேணாம். கல்யாணத்துக்கு ரெண்டு நா முன்னாலயே தந்துருவாங்க"

மலர்விழிக்கு அவர்கள் தன்னுடைய திருமணத்தைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தாலும் அதில் அவள் ஒரு வித ஈடுபாடு இல்லாமலே இருந்தாள். அவளுக்கு இந்த திருமணம் நடைபெறக் கூடாது என்பதை விட திருமணம் தள்ளிப் போனாலே போதும் என்று இருந்தது.

அந்த திருமணத்திற்காக, சத்யாவின் தந்தை ஐந்து பவுன் நகை பற்றியும், சத்யாவும் நாராயணனும் வாங்க வேண்டிய கடன் பற்றியும், மலர்விழி எந்தவொரு எதிர்பார்ப்பும் இல்லாமல், ஒவ்வொருவரும் ஒரு வகையான மனநிலையில் இருந்தனர்.

சத்யா, "என்னங்க, எவ்ளோ கடன் வாங்குறது?"

"எவ்ளோ வாங்குனாலும், அது நம்ம சக்திக்கு மேலதான். தலைக்கு மேல தண்ணி வந்துருச்சு. அளந்து பாத்து என்ன ஆகப் போகுது"

நாராயணனுக்கு கடனைத் திருப்பி கொடுக்க முடியும் என்ற நம்பிக்கை இல்லையென்றாலும், கடன் கிடைத்தால் போதும் என்று இருந்தது. அந்தக் குடும்பத்தில் இருந்த எல்லோரும் ஏதோ ஒரு வகையில் அந்தத் திருமணத்தைப் பற்றிய பயத்துடனே இருந்தனர்.

## -அத்தியாயம் : 27-

மலர்விழிக்கு திருமண ஏற்பாடு நடந்து கொண்டிருக்கும் செய்தி சூசையை மனத்தளவில் பெரிதும் பாதித்திருந்தது. அவனால் எந்தவொரு வேலையிலும் முழுவதுமாக ஈடுபட முடியவில்லை. ஏதாவது ஒரு தருணத்தில் அவளைப்பற்றி நினைத்துக் கொண்டிருந்தான். மலர்விழியைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்த தருணத்தில் தான் அவனுடைய படகு திடீரென்று நின்றது. படகின் உள்ளே அவன் படுத்திருந்ததால், என்ன நடந்தது என்று பார்க்க வெளியே எழுந்து வந்தான். அந்தநேரம் அவனுடைய படகு ஏதோ ஒன்றுடன் பலமாக மோதியது. அவன் வெளியே வந்து பார்த்ததும் அவனால் எளிதாக யூகிக்க முடிந்தது.

அவன்நடக்கக் கூடாது என்று நினைத்துக் கொண்டிருந்தது அங்கே நடந்து கொண்டிருந்தது. இலங்கை கடற்படையைச் சேர்ந்த இருவர் இவர்களின் படகினுள் குதித்தனர். குதித்த இருவரும் அவர்களின் மொழியில் ஏதோ பேசினர். அவர்கள் பேசிய எதுவும் சூசையின் படகில் இருந்தவர்களுக்கு புரியவில்லை. அவர்கள் கோபத்துடன் சைகை காட்டிப் பேசியதைப் பார்த்து முட்டி போடச் சொல்கின்றனர் என்று புரிந்து கொண்டு படகில் இருந்தவர்கள் முட்டி போட்டனர். கொஞ்ச நேரம் சூசைக்கு என்ன நடக்கிறது என்று தெரியாமல் முழித்துக் கொண்டிருந்தான். அவனைப் பார்த்து இலங்கைக் கடற்படையைச் சேர்ந்தவன் கோபமாக பேசவும் சூசையும் முட்டி போட்டான்.

அவர்கள் பேசுவது இவர்களுக்கு கொஞ்சம் கூட புரியவில்லை. ஆனாலும் அவர்கள் இவர்களிடம் அவ்வப்போது கோபமாக ஏதோ கேட்டனர். அவர்கள் ஏதோவொரு கேள்வி கேட்கின்றனர் என்று மட்டும் இவர்களுக்கு புரிந்தது. என்ன செய்யப் போகிறார்களோ என்ற பதை பதைப்பில் அவர்களின் இதயத் துடிப்பு பக்கத்தில் இருப்பவர்களுக்கு கூட கேட்டுக் கொண்டிருந்தது.

ஏதோ பேசிக் கொண்டிருந்த இலங்கைக் கடற்படையைச் சேர்ந்தவன், சூசை அருகில் முட்டி போட்டிருந்த ராஜூவின் வயிற்றில் உதைத்தான். பின்னோக்கி விழுந்தவன் அவனால் முட்டி போடுவது கடினம் என்று தெரிந்தும், ஒருவேளை முட்டி போடவில்லையென்றால், தண்டனை பெரியதாக இருக்கும் என்று நினைத்து வலியுடன் முட்டி போட்டான். அவர்களில் ஒருவன் படகில் இருந்த இறால், கணவாய் மற்றும் மீன்களை அள்ளி கடலில் கொட்டினான். மற்றொருவன் அருகில் நின்று கொண்டிருந்த இலங்கை கடற்படையைச் சேர்ந்த படகில் இருப்பவனிடம் ஏதோ கேட்க, அவனுக்கு தன்னுடைய படகில் இருந்து

கத்தியை எடுத்துக் கொடுத்தான், மற்றொருவன். அவன் கத்தி எடுப்பதைப் பார்த்ததும் படகில் இருந்த அனைவரும் பயந்து நடுங்கி விட்டனர். அவன் படகில் இருந்த வலையை அறுக்க ஆரம்பித்தான். ஒரு இடத்தில் மட்டும் அறுத்தால் சீக்கிரம் சரி செய்து விடுவார்கள் என்று நினைத்து பல இடங்களில் அறுத்துக் கொண்டிருந்தான்.

சூசைக்கு இதுதான் முதல்முறை என்பதால் ரொம்பக் கொடுமையை அனுபவிப்பது போல் துடித்துக் கொண்டிருந்தான். இறால் மற்றும் கணவாய்களை கடலில் கொட்டியதையையும், வலையை அறுத்ததையும் பார்த்த சூசைக்கு தன்னுடைய மொத்த உழைப்பும் வீணாய்ப் போவதைப் பார்த்து துடித்துக் கொண்டிருந்தான். ஆனாலும் இலங்கைக் கடற்படை இதனுடன் விட்டு விட வேண்டும் என்றும் இலங்கைக்கு இழுத்துப் போய்விடக் கூடாது என்று வேண்டிக் கொண்டிருந்தான்.

சிறிதுநேரம் அவர்களுக்குள் பேசிக் கொண்டிருந்தவர்கள், கோபத்தில் இவர்களிடம் ஏதோ சொல்லிவிட்டு, அவர்களின் படகில் ஏறிக் கொண்டனர். முட்டி போட்டிருந்த படியே அவர்கள் செல்வதை அவர்கள் அனைவரும் பார்த்துக் கொண்டிருந்தனர். இவர்களின் பார்வையை விட்டு அவர்கள் மறைந்ததும், அவரவர்களுக்கு ஏற்றது போல் சாய்ந்து கொண்டனர்.கொஞ்ச நேரம் கழித்து சூசை, "என்னண்ணே இவைய்ங்க. இருந்த றாலையும் கணவாயையும் கடல்ல கொட்டிட்டாய்ங்க. மடியவும் கிழிச்சுட்டாய்ங்க".

"இன்னைக்கி நம்மளயாச்சும் விட்டுட்டு போணாய்ங்களேன்னு சந்தோசப் படு. செல நேரம் போட்டயும் அடிச்சு நொறுக்கிட்டு நம்மளயும் புடிச்சுட்டு போய்டுவாய்ங்க".

"இப்ப என்னண்ணே பண்றது?"

"வேற என்ன பண்றது? கரைக்கு போக வேண்டியதுதான். மடி இல்லாம காத்து கடல்ல கெடந்து என்ன பண்றது?"

சூசைக்கு உயிர் பிழைத்ததைப் போல் இருந்தது. இருந்தாலும் படகினுள் ஏற்பட்ட இழப்புகள் அவனை வேதனைப் படுத்திக் கொண்டிருந்தது. கரையில் வந்து நங்கூரமிட்டு வீட்டுக்கு வந்தான். வீட்டுக்கு வந்ததும் ஜோதி சூசையிடம், "என்ன சூச, என்ன ஆச்சு? இம்புட்டு சீக்கிரம் வந்துட்ட?"என்றாள்.

"அத ஏமா கேக்குற? ஸ்லோன் நேவிக்காரைய்ங்க வந்து றாலையும் கணவாயவும் கடல்ல கொட்டிட்டு மடிய அறுத்துப் போட்டுட்டுப் போய்ட்டாய்ங்க. அதான் போட்ட கரைக்கு விட்டுட்டோம்"

"அய்யய்யோ, ஒன்ன அடிச்சாய்ங்களாப்பா?"

"இல்லமா. என்னலாம் அடிக்கல. ராஜுவெதான் பூட்ஸ் காலால ஒதச்சான். அவனால நடக்க முடியாம இப்ப நடந்து போறான்". இவர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டுக் கொண்டிருந்த சூசையின் தாத்தா, "இந்த ஸ்லோன்காரய்ங்க நம்மள தொழில் பண்ணவும் விடமாட்டாய்ங்க. நம்மளும் அவைய்ங்கள்ட்ட இருந்து தப்பிக்க முடியல".

"போட்ல ரெம்ப வேல வருமா என்ன? ரெம்பயா செதச்சுட்டாய்ங்க?"

"இல்ல தாத்தா. மடிய மட்டுந்தான் அறுத்துட்டாய்ங்க. அதுக்கு மட்டும் வேல பாத்தா போதும்".

"அதுக்கு கூட நம்மள்ட்ட காசு எங்க இருக்கு? இதுக்கு மேல யார்ட்ட கடன் வாங்குறது?"

இதைக் கேட்டு கொண்டிருந்த ஜோதி, "என்ன பொழப்பு இது? பத்து ரூவா சம்பாரிச்சு பதினஞ்சு ரூவா செலவு வைக்குது. ரெம்ப கஸ்டமா இருக்கு. பேசாம ராசா சொன்ன ஆள்ட்ட போட்ட வித்துருவோமா?"

"போட்ட வித்துட்டு என்ன பண்றது? நீங்க ரெண்டு பேரும் என்ன பண்ணுவீக? நா வயசான ஆளு. ஒங்க ஒத்தாசக்கு தான் இருக்கேன். இல்லனா, ஒந்தம்பி வீட்ல இருந்துக்குருவேன். நீங்க என்ன பண்ணுவீக?"

"வேற என்னப்பா பண்றது? சூச சம்பளத்துக்கு போனாக்கூட போதும். நம்மளுக்கு என்ன பொம்பளப் புள்ளயா இருக்கு? போட்ட வித்து கடன அடச்சிட்டு வர்ற காசுல நிம்மதியா வாழ்க்கைய ஓட்டலாம்".

"சூச என்ன சொல்ற?"

"நா என்னத்த சொல்றது? நீங்க முடிவு பண்ணுங்க. கடன அடச்சுடலாம்னா போட்ட வித்துருவோம். இல்லன்னா வேணாம்"

அடுத்தநாள் காலை டேவிட் வீட்டிற்கு வந்ததும் நேற்று நடந்ததையும் படகை விற்கப் போவதாக பேசிக் கொண்டிருந்ததையும் அவரிடம் கூறினர். அதைக் கேட்டுக் கொண்டிருந்த டேவிட், "நீங்க சொல்றதும் சரிதான். அதுக்காக இம்புட்டு நாளும் சொந்த போட்ல போயிட்டு திடீர்னு சம்பளத்துக்கு போனா நல்லா இருக்குமா?"

"அத சூசட்ட கேட்டாச்சு. அவந்தான் கடன அடச்சா சரினு சொல்றான். அதுக்கப்புறந்தான் ஒங்கள கூப்புட்டோம்".

"என்னடா சூச சொல்ற? சம்பளத்துக்கு போறது, நம்ம போட்ல போற மாதிரி இருக்காதுடா. நம்ம வேலக்காரங்க மாதிரி இருக்கனும். அது ஒரு மாதிரி சங்கடமா இருக்குமே. ஒனக்கு ஒத்து வருமாடா?"

அப்போது சம்பளத்திற்கு போவது எப்படி இருக்கும் என்று

தெரியாததால், அவன் அதைச் சமாளித்து விடலாம் என்றே எண்ணிக் கொண்டிருந்தான். எனவே சூசை, "அதுலாம் பாத்தா சரி வருமா சித்தப்பா? இப்ப கடன அடைக்க ஒரு வழி பண்ணுவோம். போட்டுக்கு பண்ற செலவு கொறையும்ல".

அவர்கள் அனைவரும் பேசிக் கொண்டிருந்துவிட்டு, படகை விற்று விடலாம் என்ற முடிவுக்கு வந்தனர். சூசையின் தாத்தா சென்று ராசாவைப் பார்த்து பேசுவதாக முடிவு செய்து விட்டு வீட்டை விட்டு கிளம்பிச் சென்றார். ஜோதிக்கு படகை விற்பது என்பது மிகுந்த வருத்தத்தை தருவதாக இருந்தாலும், அதைப் பற்றி வெளியில் அவர்களிடம் சொல்லவில்லை.

அங்கே சூசையின் வீட்டிலும் மலர்விழியின் வீட்டிலும் கிட்டத்தட்ட் ஒரே செயல்தான் நடந்து கொண்டிருந்தது. எல்லோருடைய சம்மதத்தையும் கேட்ட அவர்கள் படகிடம் எதுவும் கேட்க வேண்டும் என்று தோன்றவில்லை. அதைப் போலவே நாராயணனும் சத்யாவும் மலர்விழியின் சம்மதத்தை பெறாமலே அடுத்தவர்களின் வீட்டிற்கு அனுப்ப தயாராக இருந்தனர்.

## -அத்தியாயம் : 28-

மலர்விழி ஒரு வழியாக திருமணத்திற்கு தயாராகிக் கொண்டிருந்தாளா அல்லது திருமணத்திற்கு தயாராக கட்டாயப் படுத்தப்பட்டாளா என்றே தெரியாத மனநிலையில் இருந்தாள். திருமணத்திற்கு பத்திரிக்கை அடித்து வந்து அவளிடம் காட்டிய பொழுது தன்னுடைய பெயர் முக்கியமான இடத்தில் இருப்பது அவளுக்கு ஒரு மாதிரியான உணர்வைத் தந்தது.

சூசையின் படகு விலைக்குப் பேசப்பட்டுக் கொண்டிருந்தது. சூசையின் தாத்தா ராசாவிடம், "நீ சொன்ன மாதிரி போட்ட வித்தரலாமுனு முடிவுக்கு வந்தாச்சு. நல்ல வெலக்கி எதுவும் சொல்ல மாட்டேங்குறியேப்பா?"

"நாந்தான் அப்பவே கேட்டேன்ல. அப்ப நீங்க ரெடியா இல்ல. இப்ப கேட்டா என்ன பண்றது? சரி நீங்க என்ன வெலக்கி எதிர் பாக்குறீங்க?"

"ஆறு லச்சம் இல்லனா அதுக்கு மேல சொல்லுப்பா. ஏற்கனவே அஞ்சு லச்சத்துக்கு சரினு சொன்ன ஆளுகிட்ட ஆறுக்கு ரெடியானு கேளுப்பா. அஞ்சே முக்கா வர குடுக்கலாம்"

"அஞ்சே முக்காலுக்குலாம் வர மாட்டாங்க. அஞ்சு அஞ்சே காலு வர பேசிப் பாக்கலாம்".

"சரிப்பா. அஞ்சரைக்கு மேலயாவது பேசு. தேவப் படுறதாலதான விக்கிறோம். நெலமய புரிஞ்சு வாங்குறதுக்கு யாராச்சும் இருக்காங்களானு பாருப்பா".

"சரி நான் பேசிப் பாக்குறேன். ஆளு ரெடியானதும் சொல்றேன்".

ராசாவிடம் சரி என்று சொல்லிவிட்டு சூசையின் தாத்தா வீட்டுக்கு வந்தார். டேவிட், சூசை மற்றும் ஜோதியிடம் ஐந்தரை லட்சம் வரை விற்றுத் தருமாறு ராசாவிடம் கூறியதை சொன்னார்.

"சரி மாமா, அஞ்சரைக்கு நம்ம சொன்னா அஞ்சு லச்சத்துக்கு கூட வாங்க மாட்டாய்ங்களே. என்ன பண்றது?"

"என்ன வெலக்கி ஆள கூட்டிட்டு வரான்னு பாப்போம். நம்மளுக்கு தேவையான அளவுக்கு வந்தா குடுப்போம். இல்லனா விக்க வேணாம்"

"இருக்க கடனே நாலரை லச்சத்துக்கு மேல இருக்கு. என்ன பண்றது?"

இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஜோதி, "வேற என்னப்பா செய்றது? சம்பளத்துக்கு போனாலாச்சும், போட்டுக்கு பண்ற செலவு

கொறையும்ல"

அவர்கள் பலவாறு பேசி ஐந்து லச்சத்துக்கு மேல் வந்தாலே விற்று விடலாம் என்ற முடிவுக்கு வந்தனர். அன்றைய மாலை நேரமே ராசா சூசையின் வீட்டுக்கு வந்தார். ராசா வந்ததும் சூசையின் தாத்தா, "சூச, போயி ஒன் சித்தப்பாவ கூட்டிட்டு வா" என்று கூறினார்.

"போட்ட வாங்குறத்துக்கு ஆளு ரெடியா இருக்காக. ஆனா அஞ்சரை ஆறுக்குலாம் வர மாட்டாக".

டேவிட், "வேற எவ்வளவுக்கு எதிர் பாக்குறாக?"

"நாலரை நாலே முக்கால்னா அவுக சரின்னு சொல்லிடுவாக. நானும் அஞ்சரை வர கொண்டு வந்துர்லாம்னு பாத்தேன். ஆனா முடியல".

சூசையின் தாத்தா, "ஏம்பா, இங்க இருக்க நெலமதான் ஒனக்கு தெரியும்ல, கொறஞ்சது அஞ்சு முப்பதுக்காச்சும் முடிச்சுக் குடுப்பா".

"நாலே முக்கா வர சொன்னாக. வேணும்னா அஞ்சு பத்து அஞ்சு இருவது வர பேசிப் பாக்குறேன். அவுகள ஒரு தடவ போட்ட பாக்க கூட்டிட்டு போலாமா?"

"கூட்டிட்டு போப்பா. சூசயவும் அனுப்புறேன். அவங்கூட போயி போட்டப் பாக்கட்டும்"

எப்படியாவது ஐந்து லட்சத்திற்கு மேல் விற்று விட வேண்டும் என்ற மனநிலையில் சூசை வீட்டைச் சேர்ந்த அனைவரும் இருந்தனர். அடுத்த நாள் காலை ராசா சூசையின் வீட்டுக்கு இருவரைக் கூட்டி வந்தார். அவர்கள் இருவரையும் கூட்டிக் கொண்டு சூசை படகுக்கு சென்றான். அவர்கள் படகைச் சுற்றிப் பார்த்து விட்டு இறங்கி வரும் பொழுது, சூசைக்கு ஏதோவொன்று நம்மை விட்டு நிரந்தரமாக விலகுவது போல் இருந்தது.

படகிலேயே கொஞ்ச நேரம் உட்கார்ந்து விட்டு வரலாமா என்று நினைத்தான். பிறகு அவ்வாறு நடப்பது சிறு பிள்ளைத் தனமாக இருக்கும் என்றும் தான் கொஞ்சம் வளர்ந்தவன் என்றும் நினைத்துக் கொண்டு படகை விட்டு கீழிறங்கி அவர்களுடன் வீட்டிற்கு வந்தான்.

வீட்டில் சூசையின் தாத்தாவும் சித்தப்பவும் ராசாவுடன் பேசிக்கொண்டிருந்தனர். இவர்கள் வருவதைப் பார்த்ததும் ராசா, "என்ன போட்டப் பாத்துட்டீங்களா? எப்புடி இருக்கு?"

"பாத்தோம். பரவால. என்ன வெல சொல்றீங்கன்றத வச்சுதான் வாங்குறதா இல்லையானு முடிவு பண்ணனும்."

இவர்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த சூசைக்கு படகை வாங்காமல் போய்விட்டால் நல்லதென்று இப்பொழுது தோன்றியது.

படகை விற்கலாம் என்று சொன்னவனுக்கு அதை விற்பது பாரமாகவே தோன்றியது.

ராசா, "அதான் ஓனர்லாம் ஒங்க எதுத்தாப்ல தான இருக்காக. ஒங்க வெல என்னன்னு சொல்லுங்க".

"நாங்கதான் ஒங்ககிட்ட நாலரக்கு சரின்னு சொன்னோம்ல"

டேவிட், "போட்ட விக்குற நெனப்புலயே நாங்க இல்ல. அன்னைக்கி ராசா கேட்டப்ப கூட விக்க வேணாம்னு தான் நெனச்சோம். கடன அடச்சுரலாம்னு முடிவு பண்ணிதான் விக்குறோம்"

"சரி, அப்ப என்ன ரேட்டு நீங்க சொல்றீக?"

"ரேட்டு, அஞ்சர லச்சத்துக்குனா விக்கலாம்னு இருக்கோம்".

"அஞ்சரனா செரமந்தான். நாங்களும் கடன ஒடன வாங்கிதான் ஒங்களுக்கு தரனும்."

"ஒங்க ரேட்டு என்னன்னு சொல்லுங்க. நாலரைக்கு குடுக்க முடியாது. போட்டு நல்ல நெலமைல தான இருக்கு. அஞ்சு முப்பதாச்சும் குடுக்கலாம்ல?"

"போட்டுல வேல இருக்கு. மடி சரி இல்ல. புது மடி தான எறக்கனும்"

அங்கே கூடியிருந்தவர்கள் அனைவரும் பலவாறாக பேசி, கடைசியில் ஐந்து லட்சத்து பத்தாயிரத்திற்கு முடிவு செய்தனர். முன்பணமாக பத்தாயிரம் ரூபாய் தந்து விட்டு சென்றனர். அங்கே இருந்த எவருக்கும் படகு தங்களை விட்டு செல்வது மிகுந்த மன வருத்தத்தை தந்தது. படகு தங்களை விட்டு பிரிவது அவர்களின் உடலில் இருந்து ஏதோ ஒரு உறுப்பு குறைவது போல் இருந்தது.

## -அத்தியாயம் : 29-

அன்றையை நாள் மாலை நேரம் சூசையைத் தனியாக ஒரு சந்தர்ப்பம் பாதித்தது. மாலை நேரம் சத்யாவும் நாராயணனும் மலர்விழியின் திருமணப் பத்திரிக்கையுடன் சூசையின் வீட்டிற்கு வந்தனர்.

ஜோதி, "வாங்கண்ணே, வாங்க. டீ சாப்புடுங்க"

"இல்லம்மா, வர்ற வழில தான் டீ குடிச்சுட்டு வர்றோம். மலரு கல்யாணத்துக்கு பத்திரிக்கை குடுக்கலாம்னு வந்தோம்".

"சரிண்ணே. கண்டிப்பா வர்றோம். துணி மணிலாம் எடுத்தாச்சா?"

"எடுத்தாச்சு. நக மட்டுந்தான் இன்னமும் எடுக்கல. கல்யாணத்துக்கு ரெண்டு நாளு முன்னால எடுக்கலாம்னு இருக்கோம்" என்று கூறிவிட்டு திருமணத்திற்கு கண்டிப்பாக வந்து விட வேண்டும் என்று கூறிவிட்டு சென்றனர்.

மலர்விழி தன்னை தனியாக அழைப்பாள் என்று சூசை எதிர்பார்த்தான். அழைக்கவில்லை என்றால் கூட திருமணத்திற்கு கண்டிப்பாக சென்றுவிட வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்தான். அவர்களது படகிற்கு முன்பணம் கொடுத்ததிலிருந்து அவர்களின் படகு கடலுக்குச் செல்லவில்லை. சூசை மட்டும் இருமுறை படகிற்கு சென்று வந்தான். படகிற்கு செல்வதை அவன் மிகவும் விரும்பினான். அடுத்த ஐந்து தினங்களில் சூசையின் படகிற்கு தேவையான மொத்தப் பணத்தையும் கொண்டுவந்து சூசையின் தாத்தாவிடம் கொடுத்தார்கள் படகின் புதிய முதலாளிமார்.

பணம் கொடுக்கும்பொழுது ராசாவும் அவர்களின் அருகில் இருந்தார். அவர்கள் வாங்கியதில் அதிகப்படியான பணத்தை ராசாவிற்கே கொடுக்க வேண்டியிருந்தது. பணத்தை வாங்கியதும் சூசையின் தாத்தா ராசவிடம், "நாளக்கி காலைல வந்து காசு வாங்கிக்கிறியாப்பா?" என்று கேட்டார்.

"சரி அதுக்கு என்ன இப்ப? கணக்கு எம்புட்டு இருக்குனு பாத்து சொல்லணுமா?"

"காலைல கணக்கு பாத்துக்கலாம்பா." என்று சொல்லிவிட்டு ராசா சென்றதும் பணத்தை ஜோதியிடம் கொடுத்தார்.

"காச இன்னைக்கே வாங்கிட்டு போகணும்னு எம்புட்டு துடியா இருக்காரு?"

"வேற இருக்காதாமா? அதுக்குதான இம்புட்டு வேகமா ஆளை கூட்டிக்கிட்டு வந்து போட்ட விக்க வச்சுருக்கான்."

சூசை அன்றைய இரவில் தான் முதல் முறையாக அவ்வளவு பணத்தைப் பார்த்தான். அந்தப் பணத்தைப் பார்த்துக் கொண்டிருந்ததில் படகு தன்னை விட்டு போவது கூட அவ்வளவு வருத்தத்தை தரவில்லை. அந்த நேரம் சூசையின் தாத்தா, "இப்ப இருக்கதுலாம் நாளக்கி இருக்காதுப்பா. கொஞ்சந்தான் இருக்கும்" என்று கூறியதும் சூசையின் சந்தோஷம் கொஞ்சம் குறைந்தது.

அடுத்த நாள் காலை சூசை தன்னுடைய படகை நோக்கி போனான். அதனுள் ஏறிப் பார்ப்பதற்கு தனக்கு உரிமை இருக்கிறதா என்று நினைத்தவன், அவன் மனதை ஏதோ ஒன்று உந்தித் தள்ள படகினுள் ஏறி நின்றான். இலங்கைக் கடற்படை தன்னுடைய படகிற்குள் வந்ததும் தான் முட்டி போட்ட இடத்திற்கு வந்து கொஞ்ச நேரம் நின்று பார்த்தான். அவனை அறியாமல் வந்த பெருமூச்சு அவனை படகை விட்டு இறங்குமாறு சொன்னதுபோல் இருந்தது.

படகிலிருந்து இறங்கி வரும்பொழுது அவர்களிடமிருந்து படகை வாங்கியவர் நின்று கொண்டிருந்தார். அவர் தன்னை எதுவும் பேசி விடுவாரோ என்று பயந்து கொண்டே அவரைப் பார்த்தான். அவருடைய பார்வையில் துளிகூட கோபமில்லாமல் இருந்தது. அவரிடம் எதுவும் பேசாமல் வீட்டை நோக்கி நடந்தான்.

## -அத்தியாயம் : 30-

ராசாவின் கடனை கொடுத்து முடித்ததும், மீதமிருந்த பணத்தில் சூசைக்கு ஒரு மோதிரம், ஜோதிக்கு ஒரு நகை மற்றும் விக்டோரியாவிற்கு வெள்ளிக் கொலுசும் எடுத்தனர். மீதமிருந்த பணத்தை ஜோதியின் பெயரில் வங்கியில் போட்டனர். கடன் இல்லாத உணர்வு அவர்களுக்கு ஏதோ ஒரு நிம்மதியைக் கொடுத்தாலும், படகை விற்றது குருதியை விற்று அரிசி வாங்கியது போலவே இருந்தது.

மலர்விழியின் திருமணத்திற்கு இன்னும் இரண்டு நாட்களே இருந்தது. நண்பர்களின் சொந்தக்காரர்களும் கிண்டல் செய்ததில் அவளுக்கு ஏதோ ஒரு விதத்தில் திருமணத்தின் மீது எதிர்பார்ப்பை ஏற்படுத்தியது. சில நேரங்களில் சூசை திருமணத்திற்கு வருவானா என்று யோசித்தாள். தான் சூசையைத் திருமணத்திற்கு அழைத்திருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள்.

சூசை அவர்களின் படகை விற்று, சில தினங்கள் கழித்து சம்பளத்திற்கு செல்வதற்காக டேவிட் மூலம் ஒரு படகை அணுகி அதில் செல்வதாக முடிவு செய்தனர். மலர்விழியின் திருமணத்திற்கு இரண்டு நாட்கள் முன்பாக கடலுக்குச் செல்ல தயாரானான், சூசை. கடலுக்குப் போய்விட்டு வந்ததும், அடுத்த நாள் கடலுக்கு போகாமல், மலர்விழியின் திருமணத்திற்கு செல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

படகில் ஏறிக் கடலுக்குச் செல்லும் போது வேலைகள் அனைத்தும் தன்னுடைய படகில் இருந்தது போலவே இருந்தாலும், அவனுடைய மனதில் ஏதோவொரு பாரம் இருந்து கொண்டே இருந்தது. அந்தப் படகில் செல்லும் அனைவரும் சம்பளத்திற்கு செல்பவர்களே. சூசையின் மனநிலையைப் புரிந்து கொண்டோ அல்லது புதிதாக வந்திருப்பவனுக்கு அதிகமான வேலை கொடுக்க வேண்டாம் என்றோ நினைத்துக் கொண்டு, சூசையை கடினமான வேலை எதையும் செய்ய விடவில்லை.

அன்றைய இரவில் அவர்கள் வலை இழுத்துக் கொண்டிருக்கும் பொழுது இலங்கைக் கடற்படையின் கண்ணில் இவர்களின் படகு பட்டது. இவர்களும் அதைத் தெரிந்து கொண்டு இலங்கைக் கடற்படை தங்கள் படகின் அருகில் வருவதற்குள் கிளம்பி விட வேண்டும் என்று வேகமாக வேலையைப் பார்த்தனர். ஆனால் இவர்கள் எல்லா வேலையையும் முடிப்பதற்கு முன்பாகவே இலங்கைக் கடற்படை இவர்களை நெருங்கி விட்டது. கடற்படை வீரர்கள் மூன்று பேர் இவர்களின் படகிற்குள் நுழைந்து கோபமாக ஏதோ பேசினர். அந்தக் குளிரிலும் அங்கே இருந்த அனைவரையும் வியர்வை நனைத்து விட்டது. வந்த மூவரில் ஒருவன்

சூசை அருகில் இருந்தவனை உதைத்தான். இன்னொருவன் சூசையின் அருகில் வந்து சூசையின் கன்னத்தில் மிக வேகமாக அறைந்தான். சூசை நிற்க முடியாமல் தடுமாறினான்.

அவர்கள் இவர்களைப்பற்றி ஏதோ பேசிக்கொண்டே படகை சுற்றும் முற்றும் பார்த்தனர். பிறகு இலங்கைக் கடற்படையின் படகில் இருந்தவன், இவர்களின் படகில் இருந்தவனிடம் கயிறை வீசினான். அந்தக் கயிறை எடுத்து இவர்களின் படகில் கட்டினான். இலங்கைக் கடற்படை அவர்களின் படகை ஓட்ட ஆரம்பித்தனர்.

அவர்களின் படகுடன் சேர்ந்து இவர்களின் படகும் சென்று கொண்டிருந்தது.அடுத்த நாள் காலை சூசையின் வீடு கூட்டத்துடன் இருந்தது. எப்பொழுதும் ஆறுதல் சொல்லும் டேவிட் கூட மிகுந்த வேதனையுடன் திண்ணையில் அமர்ந்திருந்தார். ஜோதி தலையில் அடித்துக் கொண்டே அழுது கொண்டிருந்தாள். அவர்களின் மிகப் பெரிய பயமே அந்தோணியின் மரணத்திற்கு இலங்கை ராணுவம் காரணமாயிருந்தது போல், சூசையை எதுவும் செய்து விடக் கூடாது என்பதுதான்.

சூசை இலங்கைக் கடற்படையால் பிடிபட்ட இரண்டாவது நாள், மலர்விழி திருமணக் கோலத்தில் மணவறைக்கு அழைத்து வரப்பட்டாள். கூட்டத்தினரைப் பார்க்க வெட்கப்பட்ட மலர்விழி தலை குனிந்த வண்ணம் ராமுவிற்கு அருகில் அமர்ந்தாள்.

ஜோதி அவர்களின் வீட்டில் அழுதபடி படுத்துக் கிடந்தாள். டேவிட் அவளுக்கு ஆறுதல் சொல்லிக் கொண்டிருந்தார். சூசையின் தாத்தா என்ன செய்வது என்று தெரியாமல் மணலில் அமர்ந்திருக்க, விக்டோரியாவைத் தரையில் தவழ விட்டுவிட்டு, மேரி அடுப்படியில் வேலையாக இருந்தாள். நாட்கள் கூடக்கூட அவர்களின் பயம் கூடிக் கொண்டே சென்றது.

தலைமன்னர் சிறையில் இருந்த சூசை முதல்நாள் வாங்கிய அடி இன்னும் வலித்துக் கொண்டிருப்பதால், இடது கை பக்கமே ஒருக்களித்துப் படுத்தான். இலங்கைக் கடற்படையைச் சேர்ந்தவன் இவனுடைய வலது கைப் பக்கம் அடித்தபோது இவனுடைய கை ஒடிந்து போய்விட்டது என்று நினைத்தான் சூசை. ஆனால் இவனால் கையை அசைக்க முடிந்ததும் கை ஒடியவில்லை என்று நிம்மதி கொண்டான். அந்த வலியிலும் அவனுக்கு தூங்க வேண்டும் போல் இருந்தது. அவன் தூக்கத்திற்காக கண்ணை மூடிய அந்த நொடியில் ஜோதி மேரி கையிலிருந்து தேநீரை வாங்கி அருந்திக் கொண்டிருந்தாள், மலர்விழி ராமு கட்டிய தாலியை வாங்கியிருந்தாள். மலர்விழிக்கும் கூட

சூசையின் நினைப்பு வந்து சென்றது அந்த நேரத்தில்.

சிறிது நேரம் தூங்கியதும் அருகில் இருந்தவர் சூசையை பெரிய அதிகாரி வருவதாக கூறி எழுப்பினார். அந்த அதிகாரி இவர்களைத் தாண்டிச் சென்றதும் சூசை அருகில் இருந்தவரிடம், "வீட்டுக்குப் போயிட்டு நல்லா ரெஸ்ட்டு எடுத்துட்டு தாண்ணே அடுத்து கடலுக்கு வரணும்" என்று கூறிக் கொண்டான்.

இலங்கைக் கடற்படையின் துப்பாக்கி குண்டுகளும், உதைகளும் மற்றும் அவர்களின் சிறைபிடிப்பும் மீனவர்களுக்கு அதிகப் படியான பயத்தை உண்டு பண்ணியிருந்தாலும், அந்தப் பயம் அவர்களை கடல் தொழில் செய்ய விடாமல் நிறுத்த முடியவில்லை. அந்தக் கடல் தொழில் பல காலமாய் பல பல அந்தோணியையும், சூசையயும் மலர்விழியையும் உருவாக்கிக் கொண்டே இருந்தது.